# முன்னுரை

மனிதர்கள் மாறி மாறிப் பிறவியெடுக்கின்றனர் என்ற தத்துவத்தில் நம்பிக்கையுடையவனுக நான் இருந் திருந்தால் எனது முன்பிறவி ஒன்றில் நான் தமிழனுக் பிறந்திருப்பேன். ஆனுல் தனி மனிதர்களுடைய மறு பிறப்பில் எனக்கு நம்பிக்கை கிடையாது. 'கர்மவிதி' என்ற நியதி பல்வேறு குழுவினர் விஷயத்தில் சரித்திரத் தில் நிகழ்கிறது. சரித்திரப் போக்கில் நிகழும் இந்தக் 'கூட்டுக் கர்மவிதி' தத்துவப்படி எனது முன்னோர்களில் ஆண், பெண் ஆகிய இரு பாலரும் தமிழராக இருந்திருக்க வேண்டும்; அல்லது ஆத்மார்த்திக ரீதியிலாவது அவ் வுறவு இருந்திருக்க வேண்டும்.

ஆத்மீக, கலாசாரத் துறைகளில் இந்த ஒற்றுமை பற்றிய எனது தத்துவம் நமது நாட்டு நிகழ்ச்சிகளைப் பொறுத்த வரையிலாவது முற்றிலும் சரியாக இருந்து வருகிறது. சிலர் இந்தத் தத்துவத்தைத் தவறெனக் கூற முற்படலாம். ஆயினும் அப்படி அவர்கள் மறுத்துக் கூறுவது தற்காலிகமாகத்தான் இருக்கு மென்பது நிச்ச யம். நான் வடநாட்டில் பிறந்தவன், இந்தியைத் தாய் மொழியாகக் கொண்டவன். அப்படியிருந்த போதிலும் திருவாங்கூர்—கொச்சி ராஜ்யத்தில் தமிழர்களுடைய ரத்தம் சிந்தியபோது அதைக் கண்டித்து எதிர்ப்புக் கொடியை நான் ஏந்துவானேன்? தமிழ்நாடு என்று தங் கள் ராஜ்யத்துக்குப் பெயரிட வேண்டுமென்ற தமிழ் மக் களின் 'கலாசார ஆர்வ'த்துக்கு இன்று நான் தலைமை தாங்குவானேன்? இணைந்த உறவு இருந்தால்தான் இவை ஏற்படமுடியும் என்பதில் ஐயமில்லை. ஆனுல் இத் தகைய இணைந்த உறவும் கூட, ஆத்மார்த்திக, கலாசாரத் துறைகளில் ஒருமை இருந்தாலன்றி ஏற்படுவதில்லை.

"சரித்திரச் சக்கரம்" என்ற எனது புத்தகம் தமிழில் வருவது குறித்து நான் மிக்க மகிழ்ச்சி யடைகிறேன்.

ஹைதராபாத்
12—9—57

**ராம் மனோஹர் லோஹியா**

# பதிப்புரை

• டாக்டர் லோஹியா அரசியல்வாதி மட்டுமல்ல. உலகில் நிலவும் பல்வேறு தத்துவங்களையும் ஆராய்ந்தறிந்தவர்; அவற்றிற்குப் பொருத்தமான—புதிய விளக்கங்கள் தரும் புலமை மிக்கவர். சரித்திர நிகழ்ச்சிகளைப் பற்றிய டாக்டர் லோஹியாவின் விளக்கம், உலகப் பேரறிஞர்களெனப் புகழப்படும் மார்க்ஸ், ஹெகல், டாயின் பீ, ஸ்பெங்ளர், ஆடம்ஸ்மித் ஆகியவர்களுடைய வரிசையிலே அவரையும் ஒருவராகக் கருதத்தக்க சான்றாகத் திகழ்கிறது.

"மற்றவர்களுக்குத் தலையில் மட்டும்தான் மூளை; டாக்டர் லோஹியாவுக்கோ உடல் முழுவதும் மூளை" என்று மகாத்மா காந்தியினால் புகழ்ந்து போற்றப்பட்ட பேரறிஞர் லோஹியாவின் நூல்களைத் தமிழில் வெளியிடும் உரிமையை, என்னிடம் கொண்ட அன்பின் காரணமாக எனக்களித்த டாக்டருக்கு நான் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறேன்.

அவருடைய கொள்கைகளையும், தத்துவங்களையும் ஓரளவு புரிந்துகொண்டவன் என்ற நம்பிக்கையே இந்நூலைத் தமிழாக்க எனக்குத் தைரியமளித்தது. எனது தமிழாக்கத்தை மூலத்துடன் ஒப்பிட்டும், செப்பனிட்டும் சில பகுதிகளைத் தாமே தமிழாக்கியும் தந்த எனது இனிய நண்பரும் விஜயவாடா கல்லூரிப் பேராசிரியருமான திரு. பி. வி. சுப்பிரமணியன் எம். ஏ. அவர்களுக்கும் நான் கடமைப்பட்டவன்.

தமிழர்களுடைய வாழ்விலும் வளத்திலும் கலாசாரத்திலும் அதிக அக்கறையும் ஈடுபாடும் கொண்ட டாக்டர் லோஹியாவின் நூல்களைத் தமிழ் மக்கள் விரும்பிப் படிப்பார்கள் என்பதில் ஐயமில்லை. இந்நூலுக்குக் கிடைக்கும் வரவேற்பே அறிஞர் லோஹியாவின் வேறு பல நூல்களையும் தமிழில் தர எனக்கு உறுதுணையாக இருக்கும். இந்நூல் வெளிவரக்காரணமாக இருந்த தேனருவிப் பதிப்பகத்தாருக்கும் எனது நன்றி உரியது.

சென்னை
30-9-57

**எஸ். சங்கரன்**

# லட்சியமும் சரித்திரமும்

**சு**மார் இருபது வருடங்களுக்கு முன்பு ஒரு நாள் சரித்திர ஆராய்ச்சியில் ஈடுபட்ட சில மாணவர்கள் ஜெர்மனியிலுள்ள பெர்லின் சர்வகலாசாலை ஓட்டலில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தோம். மாணவர்களில் சிலர் ஹெகல் தத்துவத்தைப் பின்பற்றுபவர்கள், சிலர் மார்க்சிஸ்டுகள். "நாகரிகத்தில் வளர்ச்சியடைந்த இந்தியா அன்னிய நாட்டினருக்கு அடிமையானது ஏன்?" என்ற ஒரு கேள்வியை அச்சமயம் நான் கேட்டேன். சரித்திரம் படிப்பவர்களுக்கு அகம்பாவம் கூடாது. அதற்கேற்பவே அவர்கள் நடந்து கொண்டு சிந்தித்தனர். மார்க்ஸிய வாதி பின் வருமாறு பதில் கூறினார்:

"இந்தியாவின் வர்த்தகம் கிராம எல்லைக் கப்பால் தேசிய அடிப்படையில் வளர முடியவில்லை. பெருமளவில் நில வெளியேற்றம் இல்லாத காரணத்தால் நிலமற்ற விவசாயிகள் அதிகமாக இல்லை. மூலதனம் பெருகவில்லை. அதன் காரணமாக தொழில்கள் வளரவில்லை. கடைசியாக கொள்ளை யடிப்பதற்கு ஐரோப்பியருக்கு மெக்ஸிகோ போன்ற நாடுகள் கிடைத்ததைப் போல இந்தியாவுக்கு எதுவும் இல்லை."

கூறப்பட்ட விஷயங்கள் அநேகமாக சரிதான். பிரிட்டிஷார் இந்தியாவை ஆக்கிரமித்துக் கொள்வதற்கு முன்பு நமது வர்த்தகம் பெருமளவுக்கு கிராம அளவி லேயே இருந்தது. நிலமற்ற விவசாயிகள் அதிகமாக இல்லை. ஆனால் மூலதனப் பிரச்சனை விவாதத்துக் குரியது.

"நீங்கள் சொன்னதெல்லாம் இங்கிலாந்திலும், மற்றும் மேற்கு ஐரோப்பிய நாடுகளிலும் மட்டும் எப்படி ஏற்பட முடிந்தது? இந்தியாவில் ஏன் ஏற்பட வில்லை?" என்று சகமாணவராகிய அந்த மார்க்ஸிய வாதியைக் கேட்டேன். அதற்கு அவரால் பதிலளிக்க முடியவில்லை.

பின் ஹெகலிய நண்பரைக் கேட்டேன். சரித்திரத்தின் போக்கைப் பற்றி அவர் ஏதோ சொன்னார். வெளி நாட்டு ஆக்கிரமிப்பைத் தடுக்கக்கூடிய விதத்தில் இந்தியாவுக்கு சரித்திர சூழ்நிலை சாதகமாக இல்லை யென்றும், மேலும் இந்தியர்களும் பலமற்றவர்களாக இருந்ததாகவும் அவர் பதிலளித்தார். இந்த பதிலும் எனக்குத் திருப்தியளிக்க வில்லை. ஹெகல், மார்க்ஸ் ஆகியவர்களுடைய தத்துவங்கள் சரித்திர நிகழ்ச்சிகளுக்கு முடிவான பதில் கூறுபவை என்று கருதப்படுகிறது. இந்த இரு தத்துவங்களையும் பின்பற்றுகிறவர்கள் கூறிய பதிலைப் பார்க்கும் போது குழப்பமளிப்பதாக இருக்கிறது. வெளிப்பார்வைக்கு புலப்படும் அறிகுறிகளைப் பொறுத்த வரையில் மார்க்ஸிய வாதி நல்ல முறையில் பதிலளிக்க முயன்றிருக்கிறார் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் அதற்கான அடிப்படைக் காரணத்தைப் பொறுத்த வரையில் இரு வருமே தெளிவற்றவர்களாக இருக்கின்றனர். மேலும் வற்புறுத்திக் கேட்டிருந்தால் மார்க்ஸியவாதி, ஹெகலிய வாதி ஆகிய இருவர்களுடைய பதிலுமே அதிக கவனமுடன் இருந்திருக்கும். ஒரு வேளை கடுமையானதாகக் கூட இருக்கலாம்.

மார்க்ஸிய வாதி இந்த விதமாகப் பதில் அளித்திருக்கலாம்: "மனிதவர்க்க சரித்திரம் ஒரு குறிப்பிட்ட போக்கிலேயே முன்னேறி வந்திருக்கிறது. ஒரு குறிப்பிட்ட காலத்தில் மற்ற நாடுகளைப் போல் இந்தியாவுக்கு இது நல்ல நிலையில் இல்லாதிருந்திருக்கலாம். ஆனால் மனிதவர்க்கத்துக்கு அது ஒரு பெரிய விஷயமல்ல. படிப்படியாக மனிதவர்க்கம் கடைப் பிடித்து வந்துள்ள உற்பத்தி முறைகளின் முன்னேற்றத்தைத்தான் கவனிக்க வேண்டும். அச்சமயம் இத்துறையில் மேற்கு ஐரோப்பிய நாடுகள் முன்னேறியிருந்தன என்பது தான் பிரதான விஷயமேயன்றி நீங்கள் கேட்டது அவ்வளவு முக்கியமானதல்ல"

ஹெகலிய நண்பருடைய பதில் இந்த விதமாக இருக்கும்: "தத்துவ விசாரணை, அராஜகம், சிந்தனை ஆகியவை தான் இந்தியர்களுடைய விசேஷ அறிவாற்றலுக்கு உறைவிடம். அராஜகம் சில சமயங்களில் விசேஷ சாதனைகளைச் சாதிக்க உதவுகிறது. ஆனால் அதுவே, ஏற்கனவே

உலக சரித்திரத்தில் விசேஷ சாதனைகளை சாதித்துக்களைத்திருக்கும் ஒரு நாட்டை செயலற்றதாகச் செய்துவிடும்.''

இந்த பதில்கள் சரித்திர நியதியைப் புரிந்துகொள்ள எந்த விதத்திலும் உதவவில்லை. கேள்வி அப்படியே இருக்கிறது. ஒரு நாட்டில் குறிப்பிட்ட ஒரு கால கட்டத்தில் காணப்படும் நிலைமை அதே சமயத்தில இன்னொரு நாட்டில் ஏன் இருப்பதில்லை? மனிதன் படிப்படியாக எப்படி வளர்ச்சியடைந்தான் என்பதைப் பற்றி சாஸ்திர ரீதியாக விளக்குவதாகக் கூறுகிறவர்கள், மக்களிடையே உயர்வு தாழ்வு ஏன் ஏற்பட்டது என்பதைப் பற்றியும் கூற முயற்சிக்க வேண்டும். இதற்கு விடை யெதுவும் இல்லை என்றால் 'சரித்திர நியதி'யைப் பற்றிப் பேசுவதெல்லாம் வெறும் வியர்த்தமேயாகும். வெளித் தோற்றங்களை எடுத்துரைப்பது அதன் காரணங்களைக் குறிப்பிடுவதாகாது.

மனிதன் என்றால் யார்? இது பற்றிப் பல விதமான வியாக்யானங்கள் கூறப்பட்டுள்ளன. மனிதனைப் பற்றிய சரியான வியாக்யானம் கூட இல்லையென்பதே, எதைப் பற்றியும் அதிகார பூர்வமாகப் பேச நமக்கு எவ்வளவு அருகதை இருக்கிறது என்பதற்குச் சான்றாகும்.

''சிந்திக்கும் பிராணி'' என்பதாக மனிதன் அழைக்கப் படுகிறான். உண்மையிலேயே அவன் சிந்திக்கிறானா என்பது சந்தேகம் தான். இதுபற்றி அவன் தான் நினைத்துப் பார்க்க வேண்டும். அப்படிச் செய்தால் 'சிந்திக்கும் பிராணி' என்ற பட்டத்திற்கு உண்மையிலேயே அவன் தகுதியாகலாம். அப்படி அவன் சிந்திப்பதாக இருந்தால் எந்த அளவுக்கு அவனுடைய சிந்தனை, அவனுடைய நடவடிக்கைகளையும் ஞாபக சக்தியையும், உறவையும் உருவாக்குகிறது?

தனக்கு வேண்டிய கருவிகளைத் தயார் செய்துகொள்ளும் பிராணி என்றும் அவன் கூறப்படுகிறான். இது மற்ற வியாக்யானங்களை விட சிறந்தது எனலாம். ஆனால் மனிதனிடம் விசேஷ குணம் ஒன்றிருக்கிறது. அதுதான் தன்னைப் பற்றியும் தன் உறவுகளைப்பற்றியும் அவனுக்குள்ள உணர்வு.

இந்த உறவு சிலர் கூறுவதைப் போல கடவுளுடன் உள்ளதாயிருக்கலாம். அல்லது வேறு சிலர் கூறுவது போல் பெயரற்ற ஒன்றுடன் உள்ள உறவாயிருக்கலாம். எதுவாக இருப்பினும் அது இரண்டாவது விஷயமேயாகும். பிரதான விஷயம் அந்த உறவுகளின் தன்மையும் அவற்றை அவன் உணர்ந்திருப்பதுமே யாகும்.

மனிதன் தன்னை உணர்ந்து கொண்டவுடன் அவன் எந்தக் கட்டத்தில் இருந்தபோதிலும் கூட படைக்கப்பட்டுள்ள மற்ற ஜீவராசிகளிடமிருந்து தான் பிரிந்து தனியாக நிற்கும் நிலை கண்டு வருந்துகிறான். அதே சமயம் தனது உயர்வு கண்டு மகிழ்வடைகிறான். மற்ற ஜீவராசிகளுடன் கலந்து வாழ்வது எப்படி? வாழ்க்கையின் லட்சியம் என்ன? என்பதைப் போன்ற கேள்விகள் அவன் மனதிலெழுகின்றன. இதற்கு விடைகாண சரித்திரம் உதவுமா என்று அதைப் புரட்டத் தொடங்குகிறான். தன்னுடைய வாழ்க்கையின் லட்சியம் எதுவென்று எண்ணிக்கொண்டிருந்தானோ அதை யடையவே வெவ்வேறு காலத்திலும் மனிதன் முயன்று வந்திருக்கிறான் என்பதில் சந்தேகமில்லை. தானாக அவ்வாறு எண்ணினானோ அல்லது பொருளாதார நிலை அல்லது வேறு காரணங்களினால் அவன்மீது அத்தகைய எண்ணம் திணிக்கப்பட்டதோ, எதுவாக இருந்தபோதிலும் இது பரிசீலனை செய்யத் தகுந்த விஷயமாகும்.

"நான் எங்கிருந்து வந்தேன்? நான் எங்கு செல்கிறேன்? ஏன்? எப்படி நான் வாழ்கிறேன்?" என்பவை போன்ற கேள்விகளை எப்போதுமே அவன் கேட்டு வந்திருக்கிறான். சரித்திரத்தில் மனிதனுடைய வாழ்நாள் பூராவும் இருந்து வந்துள்ள இக்கேள்விகளுக்கு விடை தேடும் முயற்சியில் பல இயக்கங்கள் தோன்றியும் அழிந்தும் இருக்கின்றன. யுத்தங்களும், சமாதானங்களும் ஏற்பட்டிருக்கின்றன. இவ்வளவுக்கும் பிறகும், சரித்திர நிகழ்ச்சிகள் மூலம் தனது வாழ்க்கை லட்சியம் ஈடேற முடியுமா என்பதைக் கண்டுபிடிக்க மேலும் மேலும் முயன்றே வந்திருக்கிறான்.

எந்தவிதமான திட்டமும், நோக்கமும், போக்கும் சரித்திரத்துக்கு இருக்க முடியாது என்று கூறுகிறவர்களும் இருக்கிறார்கள். எதிர்பாராமல் நிகழ்பவை அவை. ஏதோ ஒன்று நிகழ்கிறது; ஏன் என்று யாருக்கும் தெரியாது. ஒருவன் செய்யக் கூடியதெல்லாம் விவரங்களை சேகரித்து, அவற்றைக் கோர்வையாக வரிசைப்படுத்தி என்ன நடந்ததென்பதைப்பற்றிக் கவர்ச்சியாக சொல்வது தான். ஒரு நவீனத்தை போல் படிப்பதற்கு ரசமாக சரித்திரத்தை செய்யலாம். அதற்கு நிச்சயமான ஒரு நோக்கமோ, வரையறையோ இருக்க முடியாது. இந்த கருத்து சரியானதா என்பதை அறிஞர்களிடம் விட்டுவிடுவோம்.

எனக்கு இத்தகைய கருத்தில் அக்கறை கிடையாது. ஏனெனில் என்னுடைய சிந்தனைக்கு ஒரு கருவியை அது அளிக்கவில்லை. ஆனால் சரித்திரத்தை ஆராயும்போது, மேற்கூறிய கருத்துடையவர்களும் இருக்கிறார்கள் என்பதை மனதில் வைத்துக்கொள்ள வேண்டும். சரித்திர நிகழ்ச்சிகள் ஒரு குறிப்பிட்ட போக்கிலேயே செல்கின்றன என்பதை நிரூபிக்க நாம் முயன்று கொண்டிருக்கும் போதும்கூட நமது முயற்சி வீணானது என்று முடிவுகட்டி விட்ட பலர் இருக்கின்றனர் என்பதை நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்.

சரித்திர உண்மைகளை ஒன்று திரட்டுவதே கஷ்டமான வேலையாக இருக்கிறது. இந்நிலையில் நோக்கத்தைக் காணுவதும், வியாக்கியானம் செய்வதும் எப்படி? தன்னை பௌத்த சங்கத்தில் சேர்த்துக் கொள்ளுமாறு அக்காலத்தில் பிரசித்தி பெற்றிருந்த நடனமாது புத்தரிடம் கேட்டபோது கௌதம புத்தர் எத்தகைய உணர்ச்சியை யடைந்தார் என்பதை யறிய மிகவும் விரும்புகிறேன். பேரழகியான அந்தப் பெண், சங்கத்தில் சேர்த்துக் கொள்ளுமாறு கேட்டபோது புத்தருடைய உள்ளக் கடலும் குமுறிக் கொந்தளித்ததா? நமக்குத் தெரியாது. தெரிந்துகொள்ளவும் வழியில்லை. என்ன நடந்தது என்பது புத்தரைத்தவிர வேறெவருக்கும் தெரியாது. ஒருவேளை அவருக்கே தெரியாதோ என்னவோ? கிளியோபாட்ராவின் உள்ளத்தில் ஸீஸர் மறைந்து அந்தோனி இடம் பெற்றபோது அவளுடைய உணர்ச்சிகள் எவ்வாறு இருந்தன? ஏசுநாதர்—

மக்தலீனு கதையும் இதுவேதான். மக்களுடைய உள்ளத்திலே இடம் பெற்றுள்ள இவர்களுடைய உள்ளம் அந்தக் காலத்தில் எப்படியிருந்தது. இதை சரித்திரத்தின் மூலம் தெரிந்து கொள்ள முடியாது.

இந்தியாவில் ஜாதி முறை எப்படி வளர்ந்தது? ஒரு கூட்டம், மற்றவர்களைவென்று அவர்களையும் தங்களுடன் சேர்த்துக் கொண்டதால் ஜாதிகள் ஏற்பட்டனவா? இதற்கு நம்மிடம் விவரங்கள் கிடையாது. எல்லாநாட்டு மக்களுடைய ஆரம்ப சரித்திரமும் இத்தகைய மூடுமந்திரமாகவே இருக்கின்றன. இனங்கள் குடிபெயர்ந்து, ஒன்றோடொன்று சண்டையிட்டு ஆங்காங்கே குடியேறியதாகக் கூறப்படுவதெல்லாம் ஒரு சில புதைபொருள் ஆராய்ச்சியில் கிடைத்த ஆதாரங்களைக் கொண்டே கூறப்படுகின்றது. இது எவ்வளவு தூரம் உண்மையோ தெரியாது. சரித்திரம் எவ்வளவு தூரம் உண்மை என்பதை இன்னும் நாம் கண்டுபிடிக்க வேண்டிய நிலையிலேயே இருக்கிறோம். இவற்றில் சில கண்டுபிடிக்கவே முடியாதவை என்பவற்றை மனித சரித்திரத்தைப் பற்றி ஆராயும் போது நாம் நினைவில் வைத்துக் கொள்வது நல்லது. சில விவரங்கள் கிடைத்தாலும் அதை நிரூபிக்க முடியாமல் இருக்கலாம்.

வெளிப்படையாகப் புலனாகக் கூடிய நிகழ்ச்சிகளுடைய நிலையே இதுவானால் மனிதனுடைய உள்ளத்திலே நிகழும் அதி நுட்பமான உணர்ச்சிகள் பற்றிய விவரங்களையும், அதன் விளைவுகளையும் நாம் எப்படிப் புரிந்து கொள்ளமுடியும்? சரித்திரத்தை உருவாக்கிய மகான்களின் உள்ளத்தில் இவ்வுணர்ச்சிகள் பிரதான இடம் பெற்றிருந்தன. இவை அவர்களுடைய செயல்களுக்கு அடிப்படையாக இருந்தன. ஆனால் அவர்களுடைய உள்ளத்திலேயே இவை அடங்கிக் கிடந்து விட்டன.

வாழ்வின் லட்சியத்தை அறிந்துகொள்வதற்கு இவை இன்றியமையாதவை. நமக்கு இவை கிடைக்காமல்போய் விட்ட போதிலும் சரித்திரத்திலிருந்து ஒரு தத்துவத்தைக் கண்டுபிடிக்கும் வேலையை அடக்கமாகவும் விடாமுயற்சியுடனும் நாம் தொடர்ந்து நடத்த வேண்டியிருக்கிறது.

# சுழல் தத்துவம்

சரித்திரம் சக்கரம் போல் சுழன்று வருவது என்ற கருத்து இந்தியர்களுக்குப் புதியதல்ல. சத்திய யுகம், கலியுகம், திரேதாயுகம், துவாபரயுகம் ஆகிய நான்கு யுகங்கள் நமக்குத் தெரியும். சத்திய யுகம் பொற்கால மாகவும், கலியுகம் இருண்ட காலமாகவும், வர்ணிக்கப் படுகிறது. உயர்வும் தாழ்வும் சரித்திரத்தில் உண்டு என்பதை ஒப்புக் கொள்ளும் கருத்து இது. தாழ்வுக்குப் பின் உயர்வு தானுகவே வருகிறது. மனித வாழ்வில் நடை பெறுவதற்கு ஒத்ததாகவே இதுவும் இருக்கிறது. தீமை யுடன் போராடி வெற்றிபெறும் மக்கள், சக்தியும், புகழும் பெறுகின்றனர். நாளடைவில் சக்தி, தானுகவே குன்றத் தொடங்குகிறது இருளில் ஆழ்ந்த அவர்கள் வாழ்வில் மீண்டும் ஒளி பிறக்கிறது. தாழ்வுற்றவர் உயருவது சாத்தியமாகிறது. மற்றவர்கள் சரித்திரத்துக்கு அளிக்க முயற்சித்துக் கொண்டிருக்கும் முக்கியத்துவத்தை மதத்துக்கும், தத்துவத்துக்கும் அளிக்கும் ஹிந்துக்க ளுடைய கருத்து இதுவேயாகும்.

வாழ்க்கையின் நிலையான விஷயங்களைப் பற்றி அதிக அக்கறையை இக்கருத்து ஏற்படுத்தியதுடன் நடைமுறை நிகழ்ச்சிகளில் போதிய கவனம் செலுத்த முடியாமல் செய்து விட்டது. இதன் காரணமாக இந்திய மனம் சில சமயங்களில் சக்தி இழந்து போயிற்று. இந்த ஆழ்ந்த, உயரிய கருத்தை வெறும் உவமையாக மாற்றிவிடவும் முயற்சி செய்யப்பட்டது. யுகங்களை ஒன்று, இரண்டு என்பதாக வரிசைப்படுத்தி அதற்கேற்ப அவை தரும் நன்மைகள் இருக்குமெனக் கூறினர். இந்த நான்கு யுகங்களின் சமஸ்கிருதப் பெயர்களும், எண்ணிக்கைகளின் அடிப்படையாக அமைந்தவையாகும். 'கலி' என்பதற்கு ஒன்று என்றும், 'சத்ய' என்பதற்கு நான்கு என்றும் எண்ணிக்கையைக் கொடுத்து நாலாவது படியிலிருந்து

தர்மமும் நீதியும் குறைந்து முதல் படியை யடைவதாக அவர்கள் கூறுகின்றனர். சரித்திரத்தின் சுழல் தத்து வத்துக்கு இப்படி ஒரு வியாக்யானம் செய்வது தவறாகும்.

இந்த யுகங்கள் ஒவ்வொன்றுக்கும் குறிப்பிட்ட வயதும் நிர்ணயிக்கப் பட்டிருக்கிறது என்று சொல்லத் தேவை இல்லை. அடுத்தடுத்த யுகங்களின் வயது பாதி பாதியாகக் குறைந்து வருகிறது. இதற்கு சரித்திர பூர்வ மான ஆதாரம் ஒன்றுமில்லாவிட்டாலும் இதை வகுத்த இந்திய முனிவர்களின் ரஸனை பாராட்டுக் குரியது.

சரித்திரத்தைப் பற்றிய சுழல் தத்துவம் இந்தியர் களுடைய சிந்தனையில் மட்டுமே உருவான ஒன்றல்ல. இந் நூற்றுண்டில் மேற்கு ஐரோப்பாவிலும், அமெரிக்காவி லும் அவை மீண்டும் தலை தூக்கியுள்ளன. ஆனு லும் கருத்தின் தன்மை சற்று மாறுபட்டுள்ளது. முதிர்ந்த அல்லது வீழ்ச்சியடைந்து கொண்டிருக்கும் ஒரு நாகரிகத்தின் அடையாளமாக அவை தோன்றுகின்றன. ஒரு நாகரிகம் வளருவதற்கு எவ்வளவு வருஷங்கள் ஆகின்றன? பிறகு அவை எவ்வளவு வருஷங்களில் அழி கின்றன? எவ்வளவு வருஷங்களுக்கொரு முறை இவ்வாறு உயர்வு தாழ்வு வந்து போகிறது என்பதைப் பற்றியெல் லாம் ஆராயப் பெரு முயற்சி எடுத்துக்கொள்ளப்பட் டிருக்கிறது. நாகரிக வளர்ச்சிக்கேற்ப படிப்படியாக கட்டிடக் கலை, சிற்பம், சங்கீதம், ஓவியம் ஆகிய கலைகள் வளருகின்றன என்று சொல்லப்படுகிறது. மனித வளர்ச்சி யும் இப்படித்தான் என்று சொல்லும் அளவுக்கு சிலர் சென்றதுடன் மனிதனின் ஆதிகால நாகரிகம் கட்டிடக் கலையில் தொடங்கி தற்கால நாகரிகம் இசையில் காணப் படுவதாகவும் கூறுகின்றனர்.

நாகரிகத்தில், கலைகளும் சுழல் தத்துவத்துக்கேற்ப வளர்ச்சி யடைந்திருக்கின்றன வென்பதற்கு வேண்டிய ஆதாரங்கள் உள்ளன. ஆனுல் எல்லா சமயங்களிலும் அது மாருமல் அப்படியே நிகழ்ந்து வந்திருக்கிறதா என்பது பலத்த சந்தேகத்துக்கு இடமானதே யாகும்.

பல்வேறு நாகரிகங்களை எடுத்துக் கொண்டு அவற் றின் மாறும் தன்மையைக் கவனித்துப் பார்ப்பதுடன்

இரண்டு நாகரிகங்களுக்கிடையில் ஒத்த காலத்தில் நிலவிய நிலைமை பற்றியும் ஆராய முயற்சி செய்யப்பட்டு வருகிறது. அதாவது வெவ்வேறு காலத்தில் நிலவிய இரு நாகரிகங்களை எடுத்துக் கொண்டால் அவற்றின் இறுதிக் கட்டத்தில் நிலவிய நிலைமை அநேகமாக ஒத்திருக்கிறது. இரண்டு நாகரிகங்களுக்கு மிடையே ஆயிரக் கணக்கான வருடங்கள் இடைவெளி இருந்த போதிலும் பரவாயில்லை.

மொழியின் தன்மை, நடத்தை, வாழ்க்கை முறை—நோக்கம் ஆகியவை கூட எல்லா நாகரிகங்களிலும் ஒரே மாதிரி வளருகின்றன என்று நம்பப்படுகிறது. ஒரு நாகரிகத்தின் ஆயுள் எவ்வளவு? எத்தனை தடவை பெரிய எதிர்ப்புக்களை அது சமாளிக்க முடியும்? அதன் இறுதி முடிவு என்ன? ஆகியவை பற்றிக் கண்டறிய முயற்சி செய்யப்படுகிறது.

மனித சரித்திரத்தைப் பற்றிய தத்துவம் இப்போது அநேகமாக ஜோசியமாகி விட்டது. ஆனால் சரித்திர ஆராய்ச்சியாளர்கள் ஒரு விஷயத்தை நினைவில் வைத்துக் கொள்வது நல்லது. "பிறந்தவை யாவும் இறப்பது உறுதி" என்பது மக்களுக்கும், மனித நாகரிகத்துக்கும் பொருந்துமானால் "இறந்தவை மீண்டும் பிறந்தேயாக வேண்டும்" என்பதும் உண்மையே யாகும்.

சரித்திரத்தைப் பற்றிய சுழல் தத்துவம் எல்லா கால தேச வர்த்தமானங்களுக்கும் பொருந்துவதாக இல்லாமலிருந்தபோதிலும், ஒரே மாதிரியாக நாகரிகம் மேலும் மேலும் வளர்ந்து கொண்டே போகிறது என்று சொல்லும் தத்துவத்தைவிட இது சிறந்த கருத்தாகும். இது சரித்திர ஆராய்ச்சிக்கு உற்சாகமளித்திருக்கிறது. முன்னேற்றம் முழு வளர்ச்சி பெற்ற கட்டமாக ஒவ்வொருவரும் தமது காலத்தையே கருதி வந்திருக்கின்றனர். மேலும் உலக நாகரிகங்களுக்கெல்லாம் மேனாட்டு நாகரிகமே எடுத்துக் காட்டாகவும், அதையே அளவு கோலாகவும் கொண்டிருந்தனர். அப்படிப்பட்டவர்களுடைய எண்ணிக்கை இன்று குறைந்துவிட்டது. அமெரிக்க, ஐரோப்

பிய சர்வ கலாசாலைகளிலே இருந்தவர்களிடையேகூட இந்த கருத்து மாறிவிட்டது.

உலக சரித்திரத்தைப் புராதன—மத்திய—நவீன காலங்களெனப் பிரித்து இவற்றில் நாகரிகம் ஒரு முக மாகவோ, விட்டுவிட்டோ வளர்ந்து வந்திருப்பதாகக்கூறு வது கலாசாரக் காட்டுமிராண்டித்தனமாகும். இதற்கு முடிவுகட்ட ஸ்பெங்ளர், டாயின்பீ, நார்த்ராப், ஸோரோ கின் ஆகியவர்கள் முயன்றிருக்கின்றனர். நாகரிக வளர்ச்சி பற்றிய அவர்களுடைய ஆராய்ச்சியில் தவறுகள் இருந்த போதிலும் அதுபற்றி நாம் கவலைப்பட வேண்டியதில்லை. அவர்களுடைய ஆராய்ச்சியின் விளைவாக, சரித்திர நிகழ்ச் சிகளைப் பாகுபடுத்த முடிகிறது. ஒன்றைப்பற்றி சரியாக புரிந்துகொள்வதற்கு முதற்படி அதை சரியாகப் பாகு படுத்த முடிவதாகும்.

ஒரு கலாசாரம் எப்படி உருவாகிறதென்பதைப் பாகு படுத்திக்காட்ட முயற்சி செய்யப்பட்டிருக்கிறது. உதா ரணமாக ஸ்பெங்ளர், இன்றுள்ள அறிவைக்கொண்டு வளர்ந்த கலாசாரம், ஒன்றைப் பார்த்ததின் விளைவாக ஏற்பட்ட கலாசாரம் ஆகிய இரண்டையுமே எதிர்க்கிறார். கடந்தகால கலாசாரத்துக்கு இவை முரணானவை என்று அவர் கருதுகிறார். நார்த்ராப்பும் கலாசாரத்தை விஞ் ஞான ரீதியானதிலிருந்து—உள்ளுணர்வின் விளைவாகத் தானாக வளர்ந்ததை பிரித்துக்காட்ட முயன்றிருக்கின்றார். மேலும் முன்னது மேற்கத்திய நாடுகளுடையதென்றும், பிந்தியது கிழக்கத்திய நாடுகளுடையதென்றும் சில ஆதா ரங்களுடன் காட்டியுள்ளார். ஸோரோகின் ஆராய்ச்சி மேலும் நன்றாக இருக்கிறது கருத்து, லட்சியம் புலன றிவு ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்ட மூன்று வித கலாசாரங்கள் இருப்பதாக அவர் கூறியுள்ளார். இந்த மூன்றும் ஒன்றுக்கொன்று முரணானவை என்ற கருத்து தவறானதாகும். ஏனெனில் ஒவ்வொரு கலாசாரத் திலும் இவை மூன்றும் சேர்ந்தே இருக்கின்றன. ஒன்றை விட மற்றொன்று பிரதானமாகக் காணப்பட்டிருக்கலாம். அவ்வளவுதான்.

இத்தகைய நிலைமை, இரு நாகரிகங்களுக்கு இடையே மட்டுமின்றி ஒரே நாகரிகத்தின் பல்வேறு கட்டங்களிலும் ஏற்படுவது சாத்தியமே யாகும். சரித்திரத்தின் மூலமாகக் குறிப்பிட்ட ஒரு பகுதி மக்கள் பிரதானம் வகிக்கும் இத்தகைய நாகரிகங்களின் தன்மையை விசேஷமாகப் பெற்றிருப்பதும் நடக்கக் கூடியதுதான். இந்திய மக்கள் ஆத்மதத்துவத்தில் ஊறியவர்களென்றும், அவர்களுடைய கலாசாரம் இதைப் புலப்படுத்துகிறது என்றும் நம்பப்படுகிறது.

ஒரு கலாசாரம் எந்த அடிப்படையில் மாறுகிறது என்பதை தீர்மானிக்கவும் ஏராளமான ஆதாரங்கள் சேகரிக்கப்பட்டுள்ளன. இயற்கையாக வளர்ந்த கலாசாரத்தை விட அறிவைக்கொண்டு வளர்த்த கலாசாரம் வேகமாக மாறுகிறது. வெவ்வேறு கலாசாரங்கள் ஒன்றோடொன்று கலந்துபோய் விட்டது பற்றியும் ஆராயப்பட்டிருக்கிறது. இந்தத் தத்துவங்கள் சரித்திர ஆராய்ச்சிக்கு உபயோககரமான கருவிகளாக இருந்தபோதிலும் சுழல் தத்துவத்துக்கு அது முழுவதும் ஒத்து வரவில்லை. முதிர்ச்சியடைந்த நாகரிகம் வேறு வழிகளில் போகவே முயற்சிக்கிறது. கலாசார சூரியன் இப்போது பல நாடுகளில் அஸ்தமித்துக்கொண்டு வருகிறான். அடுத்து வரும் உதய நேரத்தில் கலாசாரத் துறையில் புது வழி காண முடியுமாவென்று ஸ்பெங்ளர் கூட அவ்வப்போது முயற்சித்துப் பார்த்திருக்கிறார். பல நாடுகளிலும் உள்ள நல்ல அம்சங்களைத் திரட்டி ஒரு புது கலாசாரத்தை உருவாக்கலாமென முயற்சிப்பது இயற்கைக்கும் அறிவுக்கும் பொருந்தாதது. இணைக்கவேண்டிய அவசியத்தை உணர்ந்திருப்பதற்காக நாம் அவர்களைப் பாராட்டலாம். ஆனால் அதை அறிவுக்குப் பொருத்தமான முறையில் எப்படிச் செய்வது என்று ஆதாரங்கள் இல்லை. ஆத்மீக தத்துவங்களுக்கு முக்கியத்துவம் கொடுக்கும்— நாகரிகத்தையும், விஞ்ஞான ரீதியான நாகரிகத்தையும் இணைக்க முயற்சி செய்யப்படுகிறது. இவர்களை 'சமுதாய துறை லைஸென்கோ' என்றழைப்பது சரியேயாகும். இது வீண் முயற்சி.

இந்த இணைப்புத் துறையில் லூயி மம்போர்ட், மார்ட்டின் ப்யூபர் போன்றவர்கள் குறிப்பிடத்தக்க

முன்னேற்றம் அடைந்துள்ளனர். ஆனால் அவர்கள் கலை, மதம் போன்றவற்றிலேயே அதிகக் கவனம் செலுத்தியிருக்கிறார்கள். இந்த இணைப்பு அறிவுக்குப் பொருத்தமானது என்று அவர்கள் விளக்கவில்லை. தானாக வளர்ந்த கலாசாரமாக இருந்தாலும்கூட அதை புரியும்படி தெளிவு படுத்தவேண்டிய தவசியம். ஆத்மீக விஷயங்களை அறிவுக்குப் பொருத்தமாகவும், அறிவுக்குப் பொருத்தமானவற்றை ஆத்மீகத் தத்துவங்களுக்கு ஒத்த முறையிலும் இணைத்துக் காட்டி விளக்க வேண்டும். மம்போர்ட், ப்யூபர் ஆகியவர்களுடைய கருத்தைப் புறக்கணித்து ஐரோப்பிய அறிஞர்களான ஸ்பெங்ளர், டாயின்பீ ஆகியவர்களுடைய கருத்துக்களை ஏற்றுக்கொண்டிருப்பது, ஒரு கலாசாரம், மற்றொன்றுடன் கலக்க விரும்புவதில்லை என்பதையும், தன்னிடமுள்ள குறைகளுடன் அப்படியே இருந்துவர முயற்சிக்கிறது என்பதையுமே காட்டுகிறது. தன்னுடன் மற்ற கலாசாரங்களுடைய சிறந்த அம்சங்களையும் இணைக்க இடம் கொடுக்கும் கலாசாரம் மிக அருமை.

சரித்திரக் கருத்துக்களுக்குக் கூட ஒரு 'பாஷன்' இருக்கிறது. மேற்கு ஐரோப்பாவில் கடைசியாக, சமீபத்தில் 'பாஷனாக' இருந்து வரும் கருத்து ஆஸ்வால்ட் ஸ்பெங்ளருடைய சுழல் தத்துவமாகும். வருடத்தில் வசந்தம், கோடை, குளிர், மாரி என்று நான்கு காலங்கள் மாறி மாறி வருவதைப்போல நாரிகங்களும் பிறந்து—உன்னத நிலைமை யடைந்து—இறுதியில் வீழ்ச்சியடைந்தே யாக வேண்டுமென்றும், இதை யொட்டி இப்போது மேனாடுகளில் வீழ்ச்சி ஏற்பட்டிருக்கிறது என்றும் விளக்கி அவர் ஒரு புத்தகம் எழுதியுள்ளார். ஸ்பெங்ளருடைய கூற்றில் ஒன்றைப்பற்றி மட்டும் நான் குறிப்பிட விரும்புகிறேன். கலாசார உச்ச கட்டத்திலும், வீழ்ச்சியிலுமுள்ள பேதத்தை அவர் குறிப்பிடுகையில், உச்ச கட்டத்தில் அது கலாசாரமென்றும், வீழ்ச்சியின்போது நாகரிகமென்றும் அவர் கூறுகிறார். கலாசாரம் நிலவும்போது இயற்கைக்குப் பொருத்தமாக ஒன்றிரண்டு மாடிகள் உள்ள கட்டிடம் கட்டப்படுகிறது. நாகரிகம் நிலவும் போது இயற்கைக்குப் பொருந்தாத விதத்தில் ஏழெட்டு

மாடிகள் கொண்ட கட்டிடம் கட்டப்படுகிறது. இது தான் இரண்டுக்கும் அவர் தரும் உவமை.

மேனாட்டு சரித்திரத் தத்துவங்களெல்லாம், முன்னேற்றம், ஒரே சீராகவும், விட்டுவிட்டும் ஏற்பட்டு வந்திருக்கிறதெனக் கருதுகின்றன. மனிதவர்க்கம் பொற்காலத்திலிருந்து சீரழிந்து வரவரக் கெட்டுப்போய்க் கொண்டிருக்கிறது என்று சொல்லிக்கொண்டிருப்பவர்களைப்பற்றி நாம் அதிகமாகக் குறிப்பிட வேண்டியதில்லை, ஏனெனில் நிலையான விளைவு எதையும் அவர்கள் ஏற்படுத்தி விடவில்லை. மேற்கத்திய நாகரிகத்துக்கு சின்னமாக விளங்கும், எப்போதும் மாறிக்கொண்டே யிருக்கும் தொழில் நுணுக்கமும், முதலாளித்துவப் பொருளாதார அமைப்பும், மேனாட்டு மக்களுக்கு தங்களுடைய எதிர்காலத்தில் உறுதியான நம்பிக்கையை யளித்தது. மனிதன் சுயநலத்தையே நாடுகிறான். எல்லோருமே சுயநலத்தை நாடினால் அதன் விளைவாக எல்லோருக்குமே அதிக நன்மை விளைகிறது என்ற முதலாளித்துவத்தினுடைய ஆரம்ப கால நம்பிக்கைக்கு தொழில் நுணுக்க அபிவிருத்தி உரமாக இருந்து வந்தது. சிறுவர்கள் உழைத்த போதும், நாடுகளுக்கிடையே யுத்தம் நிகழ்ந்தபோதும், தாங்கமுடியாத சுரண்டல் நிலவிய போதும்—இவையெல்லாம் தற்காலிக மானவை யென்றும், பூரண தொழில் மயமாக்கப்பட்ட பிறகு, தொழிற்சாலைகளும், விவசாயமும் மக்களுடைய தேவையைப் பூர்த்தி செய்யு மென்றும் உலகிலுள்ள மக்களுக்கு சாந்தியும், சுபிட்சமும் கிட்டு மென்றும் முதலாளித்துவம் கூறிவந்தது.

பொருளாதாரத் துறையில் ஆடம் ஸ்மித்தும், அவரைப் பின்பற்றுகிறவர்களும் இந்தக் கருத்து பரவக் காரணமாயிருந்தனர். அரசியல் துறையில் பெந்தாம், மில் ஆகியவர்களுடைய நூல்களும், ஜனநாயகப் பிரதிநிதித்வ முறையும் அதற்கு உதவி செய்தன. ஆதிகால காட்டுமிராண்டி நிலையிலிருந்து தெய்வ நம்பிக்கை, தத்துவ விசாரணை ஆகிய படிகளின் வழியே காம்டி, ஸ்பென்ஸர் ஆகியவர்கள் கூறும் நிதர்சனத் தத்துவ நிலைக்கு மனிதர்கள் வந்திருப்பதாக சமூக இயல் நூல் கூறுகிறது. இத் தத்து

வங்களை சரித்திரத் துறையில் புகுத்தி சரித்திரத் தத்துவத்துக்கு அஸ்திவார மிட்ட பெருமை ஜெர்மனியரையே சாரும். மனிதன் தன்னுடைய வளர்ச்சிக்காகப் பல ஸ்தாபனங்களை உருவாக்கிறான். அரசாங்கமும் இப்படி ஏற்பட்ட ஒன்று தான். சரித்திரத்தின் தன்மையும் இப்படிப் பட்ட ஸ்தாபனங்களின் மூலம் வளருகிறது என்று அவரவர்களுடைய வழியில் எடுத்துக் காட்டி ஹெகல், பிக்டே போன்றவர்கள் இவ்வுலகை சொர்க்க பூமியாக்க முயன்றனர்.

பொருளாதார, சரித்திர, சமூக இயல் துறைகளில் கூறப்பட்ட மேற்கூறிய கருத்துக்களில் எதுவும் சரியானதல்ல. ஆனாலும் நவீன கால மக்களின் உள்ளத்தில் அவை இடம் பெற்று விட்டன. மேற்கத்திய நாகரிகம், அமெரிக்காவைப் போல் எங்கெல்லாம் இன்று செல்வாக்கு பெற்றுள்ளதோ அங்கெல்லாம் முன்னேற்றம் ஒரே சீராக ஏற்பட்டது என்ற கருத்தே நிலவுகிறது.

ரஷ்யாவைப் போல் எங்கெல்லாம் இந்த நாகரிகம் உச்ச கட்டத்தை யடைந்து கொண்டிருக்கிறதோ அங்கெல்லாம் முன்னேற்றம் தொடர்ந்து வளர்ச்சி பெற்று வருகிறது என்ற கருத்து நிலவுகிறது. கம்யூனிஸ தத்துவ கர்த்தாவான கார்ல் மார்க்ஸ், ஆடம் ஸ்மித்துனுடைய தத்துவத்துக்கு நேர் விரோதமாகக் காணப்பட்ட ஒரு பொருளாதாரத் தத்துவத்தை வகுத்தார். அதே போல் சரித்திரத் தத்துவத் துறையில் ஹெகல் எழுதியதற்கு மாறானதாக மார்க்ஸ் எழுதினார். முன்னேற்றத்தில் நம்பிக்கை கொண்ட தத்துவ ஞானி அவர். பதினெட்டு, பத்தொன்பதாவது நூற்றாண்டைச் சேர்ந்த ஐரோப்பிய அறிஞர்கள் கூறிய கருத்துக்களைப் போலவே மார்க்ஸினுடைய கருத்தும் தவறானதாக இருக்கலாம். ஆயினும் அவை மனிதர்களைக் கவர்ந்துள்ளன. அவர் எந்தப் பகுதிகளுக்காக தமது தத்துவத்தை வகுத்தாரோ அங்கே இது பிரமாதமான விளைவுகள் எதையும் ஏற்படுத்தாமல் இருந்திருக்கலாம். ஆனாலும் சரித்திரத்தின் விசித்திரப் போக்கின் விளைவாக மேற்கத்திய நாகரிகத்துக்கு மனம் அடிமைப் பட்ட, அல்லது அந்நாகரிகம் எட்டிக் கூடப்பாராத

மக்களிடையே விளைவை ஏற்படுத்தி விட்டது. மேற்கு ஐரோப்பிய, அமெரிக்க நாடுகளுக்கு ஆபத்து நெருங்குகிறதென்று நிரூபிக்க தொடங்கிய மார்க்ஸ், அடிமை மக்களுக்கு நல்ல காலம் நெருங்கி விட்டது என்று நிரூபிப்பதில் வெற்றி பெற்று விட்டார்.

பத்தொன்பதாவது நூற்றாண்டில் மேற்கு ஐரோப்பிய நாடுகளிடையே முன்னேற்றத்தில் பொதுவான நம்பிக்கை இருந்து வந்தது. இன்னுங்கூட இன்றைய 'சரித்திர பாஷனு'க் கேற்ப மிக்க அடக்கத்துடன் அது தலைகாட்டுகிறது. டாயின் பீயினுடைய கருத்துகளே சமீப காலத்தியவை. ஸ்பெஸ்ளருடையவை இதற்கு முந்தியவை. மன்னர்கள், போர் வீரர்கள், தளகர்த்தர்கள் ஆகியவர்களுடைய சாதனைகள்—மாபெரும் சாம்ராஜ்யங்கள் ஏற்பட்டது—அல்லது கட்டிடக்கலை, சிற்பக் கலை முன்னேற்றம் ஆகியவை பற்றியெல்லாம் சரித்திரத்தில் ஏராளமாகப் படிக்கிறோமே அந்தக் காலங்கள் உண்மையில் மனிதனுடைய வாழ்வில் மகத்தான கட்டங்கள் அல்ல என்று ஆர்னல்ட்டாயின்பீ எண்ணுவதாகத் தெரிகிறது. தாழ்வும் சீர்குலைவும் ஏற்படும்போதே சரித்திரம் பெருமை பெருகிறது. மனிதனுடைய உண்மையான தேவையைப் பூர்த்தி செய்யும் மதங்கள் தோன்ற அது இடமளிக்கிறது என்று அவர் கருதுகிறார். அவருக்கு மாபெரும் சாம்ராஜ்யங்கள் உருவான காலம் மனித சரித்திரத்தில் பெருமை மிக்க கட்டங்கள் அல்ல. மாறாக இஸ்லாம், கிறிஸ்தவ, புத்த மதங்கள் தோன்றிப் பரவிய காலமே மகத்தானதாக இருக்கிறது.

இந்த கட்டத்தில்தான் மனிதன் வெளி உலகுடனும், இயற்கையுடனும், சக மனிதர்களுடனும் தனக்குள்ள உறவைப்பற்றி சிந்திக்கத் தொடங்கினான். இக் கருத்து சுழல் தத்துவத்தைப் போலவே இருக்கிறது. தாழ்வு ஏற்படுவதைப் பார்த்ததும்தான் மனிதனுக்கு முன்னேற வேண்டுமென்ற வேகம் ஏற்படுகிறது. கலை, விஞ்ஞானம் யந்திரசாதன உற்பத்தி, தொழிலபிவிருத்தி ஆகிய துறைகளில் நாம் காணும் முன்னேற்றம் உண்மையில் மனிதனுடைய வீழ்ச்சி ஆரம்பமாகி விட்டதையே காட்டுகிறதென்

பது டாயின்பீ கருத்து. மனிதனை எதிர்நோக்கியுள்ள இரவுக்குப்பின் மீண்டும் நம்பிக்கை உதயமாகலாம்.

கிறிஸ்தவ மதம், மேலும் பரவுவதன் மூலம் எதிர் காலம் சிறப்படையுமென்று இவர் நம்புகிறார். இப்போதுள்ள நிலையுடன், கிறிஸ்தவ மதமும் சேர்ந்தால் வளர்ச்சி உன்னத நிலையடையுமென்று கூறுவது 'சீரான முன்னேற்ற' கருத்தல்லவா? கிறிஸ்தவ மதத்தைவிட மேலானது ஒன்று கிடையாதென்ற நம்பிக்கை அவரிடம் வேரூன்றியுள்ளது. கிறிஸ்தவ மதமும், இஸ்லாமும் சேர்ந்து உள்நாட்டில் அமைதி, இதர நாடுகளுடன் ஒத்த நல்வாழ்வு, உலக சமாதானம் ஆகியவற்றை நிலைநாட்ட முடியுமென்பது அவருடைய எண்ணம். பல்வேறு சர்க்கார் அமைப்புகள், பொருளாதார அமைப்புகள் போன்ற நவீன கால மனிதனின் சாதனைகளை டாயின்பீ சரித்திரத்தின் நியதிக்கே விட்டுவிட்டார். கிறிஸ்தவ மதத்தின் மூலமாக, முதலாளித்துவத்தைக் கொண்டே யுத்தம், ஏழைமை, போன்ற கொடுமைகளை ஒழித்துவிடலாமென அவர் நினைக்கிறாரோ என்ற சந்தேகம் எனக்கு எழுகிறது.

நவீன கால மனிதன் தன்னுடைய தொழிலபிவிருத்தி, இயந்திர விவசாயம், ஜனநாயக சர்க்கார், பல்வேறு நாடுகளிடையே உடன்பாடு ஆகியவற்றுடன்—சக்தி வாய்ந்த கிறிஸ்தவ மதம் போன்ற ஒன்றின் உதவியுடன் தன் லட்சியத்தை அடையமுடியும் என்ற கருத்துக்கு போதிய ஆதரவு இருக்கிறது. ஆனால் என்னைப்பொறுத்தவரை முன்னேற்றக் கொள்கையுடன் சுழல் தத்துவத்தையும் இணைக்கச் செய்யும் முயற்சியைப் போன்றதே இது.

# மார்க்ஸிஸ்டுகள் வியாக்யானம்

**கா**ர்ல் மார்க்ஸினுடைய கருத்துப்படி மனிதன் பல்வேறு கட்டங்களைக் கடந்து வந்திருக்கிறன். ஆதி காலப் பிற்போக்கு நிலையிலிருந்து நவீன காலத்துக்கு சரித்திரத்தின் ஏதோ ஒரு சக்தி படிப்படியாக உலகை கொண்டு வந்திருக்கிறது. இது சில சந்தர்ப்பங்களில் ஏற்படாமல் தடைப் பட்டிருக்கலாம். அதை மார்க்ஸ் மிகத் தெளிவாக்கியுள்ளார். இவ்விஷயத்தில் அவருக்கு குழப்பம் இருந்ததாக யாரும் குறை கூற முடியாது. முக்கியமாக நான்கு கட்டங்களை மனிதன் கடந்து வந்திருக்கிறன்.

1. ஆதிகால கம்யூனிஸம்.
2. அடிமை சமுதாயம்
3. நிலப் பிரபுத்வ அமைப்பு
4. முதலாளித்துவ சமுதாயம்.

முதல் கட்டத்தை விட்டுவிடலாம். ஏனெனில் அது சரித்திர காலத்துக்கு முற்பட்டது. இந்தக் கட்டங்களில் எல்லாம் சரித்திரம் நகர்ந்து கொண்டே வந்திருக்கிறது. உற்பத்தி முறை வளர்ச்சிக்கு ஏற்ப சரித்திர நியதி ஒன்றும் உருவாகி வந்துள்ளது. உற்பத்தி சக்திகளுக்கும், உற்பத்தி உறவுகளுக்கும் இடையே மோதல் இருந்து கொண்டே வந்திருக்கிறது. மார்க்ஸிய போதனையில் இந்த இரண்டு வார்த்தைகளுமே பிரதானம் வகிக்கின்றன. இவற்றினிடையே ஏற்படும் மோதல், வர்க்கப் போராட்டத்துக்கு வழி வகுக்கிறது. வர்க்கப் போராட்ட சரித்திரமே இதுவரை மனித குல சரித்திரமாக இருந்திருக்கிறது என்று மார்க்ஸ் கூறுகிறர்.

இப்போராட்டம் மனித வரலாற்றில் பல்வேறு உருவங்களில் தோன்றியுள்ளது. நிலப்பிரபுத்வம் நிலவும்

கட்டத்தில் நடைபெறும் வர்க்கப் போராட்டம், முதலாளித்வ கால வர்க்கப் போராட்டத்திலிருந்து வேறுபட்டதாகும். பல்வேறு காலங்களிலும் வெவ்வேறு வர்க்கங்கள் இருந்திருக்கின்றன என்பதும் அவற்றினிடையே போராட்டம் நடைபெற்றிருக்கிறது என்பதும் மறுக்கப் படவில்லை. நிலவும் நாகரிகத்தில் ஒரு குறிப்பிட்ட உடைமை முறையினால் திணிக்கப்பட்ட உற்பத்தி சக்திகளை விடுவிப்பதே இப்போராட்டங்களின் நோக்கமாகும்.

நிலப்பிரபுத்வ அமைப்பு, நிலச் சொந்தக்காரர்களுக்கு ஒருவித உடைமையை அளிக்கிறது. ஒரு அளவுக்கு மேல் உற்பத்தி பெருகுவதை அது அனுமதிப்பதில்லை. இந்த அமைப்பைத் தகர்க்க இக்காலத்தில் உள்ள மற்றொரு வர்க்கம் எழுச்சி யடைகிறது. அதேபோல் முதலாளித்துவ அமைப்பில் சொத்துரிமை பற்றிய விதிகள் தொழிலிலும், விவசாயத்திலும் விஞ்ஞானத்தைப் பூரணமாகப் பயன் படுத்துவதை அனுமதிப்பதில்லை. உழைக்கும் வர்க்கம் போதிய பலம் பெற்று, சொத்து உறவுகளைக் குலைக்க எழுச்சி பெறும் வரையில் உற்பத்தி சக்திகள் கட்டுப் படுத்தப்பட்டுத்தான் இருக்கும். மனித மனத்துக்கும், அதன் நோக்கங்களுக்கும் இதற்கும் எவ்வித சம்பந்தமும் கிடையாது. சமுதாயத்தில் அது தானாக ஏற்படுகிறது. மனிதன் அதை ஏற்றுக்கொள்ள வேண்டியிருக்கிறது. ஏனெனில் அவ்வாறு அவனை நிர்ப்பந்திக்கும் சக்திகள் உள்ளன. ஒன்றோடொன்று போராடும் உற்பத்தி சக்தி, உற்பத்தி உறவு ஆகிய இரண்டையும் உள்ளடக்கிய உற்பத்தி முறையைப் பொறுத்தே சரித்திரத்தின் எல்லா அபிவிருத்திகளும் இருக்கின்றன.

ஐரோப்பாவில் மட்டுமின்றி, உலகம் பூராவிலு முள்ள மனிதனின் சரித்திரத்தை இந்த நான்கு கட்டங்களாகப் பிரிக்க முடியுமா என்பது சந்தேகத்துக்கிடமானது தான். இந்தியாவில் அடிமை சமுதாயம் இருந்தது என்பதை நிரூபிப்பதற்காக பல விவரங்களைத் திரித்துக் கூற வேண்டி யிருக்கும். அதேபோல் உலகம் பூராவும் ஒரு குறிப்பிட்ட காலகட்டத்தில் நிலப்பிரபுத்வ அமைப்பு நிலவியது என்பதை நிரூபிக்கவும் உண்மையைத் திரித்துக் கூற வேண்டியிருக்கும்.

இது ஒருபுற மிருக்க, உண்மையாக ஏற்பட்டுள்ள அபிவிருத்திகளைக் கொண்டு கார்ல் மார்க்ஸ் வகுத்த தத்து வத்தை பரிட்சார்த்தமாக ஆராயலாம். "முதலாளித்துவம் தன்னுடைய அழிவைத்தானே தேடிக் கொள்கிறது" என்று வர்க்கப் போராட்ட தத்துவம் கூறுகிறது. முதலா ளித்துவம் வளர்ந்து பெருகும் போது ஒரு புறத்தில் மூலதனம் குவியவும், மற்றொருபுறம் தொழிலாளர்கள் திரளவும் இடம் அளிக்கிறது. அதே நேரத்தில் தொழி லாளர்களைச் சுரண்டுவது அதிகரிக்கின்றது. அவர்கள் வறுமையில் ஆழ்வது தவிர்க்க முடியாத விளைவாகும். பொருளாதாரத்தின் மீது, முதலாளித்துவத்துக் குள்ள பிடிப்பைத் தகர்த்தெறியும் அளவுக்குத் தொழிலாளர்கள் ஒன்று சேர்ந்து பலம் பெறும்வரை இவையெல்லாம் நிகழ்ந்துகொண்டே யிருக்கும். முதலாளித்துவ முறை அழிக்கப்பட்டு, கம்யூனிஸ அல்லது சோஷலிஸ அமைப்பு ஏற்படுத்தப்பட்டு, பூரணமாகப் பயன்படுத்த விஞ்ஞானம் விடுவிக்கப்படும் வரையில் இவை நிகழும். இதுதான் மார்க்ஸிய வாதிகள் கூறுவது. எந்த அளவுக்கு இது உண்மை?

மூலதனம் ஓரிடத்தில் குவிகிறது என்பதில் சந்தேக மில்லை. ஆனால் பாட்டாளிகள் சமூக சக்தியாக மாற வில்லையே! ஏன்? அவர்களிடையே வறுமை ஏன் அதிக ரிக்கவேண்டும்? 'முதலாளித்துவ உலகின் எஜமானர்களே சோஷலிஸ்ட் சமுதாயத்துக்கு முன்னோடிகளாக மாறும் விதத்தில் வர்க்கப் போராட்டம் நடைபெறும்' என்று மார்க்ஸ் கூறிய திட்ட வட்டமான விதி என்ன ஆயிற்று? ரஷ்யாவில் புரட்சி ஏற்படலாம் என்று இரண்டொரு சந்தர்ப்பங்களில் ஒப்புக்கொண்டுள்ள போதிலும் ஜெர் மனியிலும், இங்கிலாந்திலும்தான் புரட்சி ஏற்படுமென மார்க்ஸும், எங்கல்ஸும் பலமுறை கூறியுள்ளனர். இதற்கு அவர்களுடைய எழுத்துக்களிலிருந்தே எடுத்துக் காட்டுகள் தரமுடியும். இவை இன்று அர்த்தமற்ற பேச் சாகிவிட்டது.

எது எப்படி இருந்த போதிலும், கம்யூனிஸப் புரட்சி ஏற்படக் கூடிய இடங்களில் ஒன்றாக மார்க்ஸின் ஜாபிதா

வில் ஒன்றாக சீனா இருக்கவில்லை. எனவே மார்க்ஸ் சித்தாந்தத்தைப் பற்றிய தத்துவார்த்த விவாதம் அர்த்த மற்றதாகி விட்டது.

முதலாளித்துவத்திலிருந்து சோஷலிஸ்ட் அமைப்பை நோக்கி மனிதவர்க்கம் முன்னேற என்னென்ன விதிகள் கூறப்பட்டுள்ளன என்பதுதான் கவனிக்க வேண்டிய விஷயம். அங்கொன்றும், இங்கொன்றுமாகக் கூறப்பட்ட ஹேஷ்யங்கள் சரியா தவறா என்பதை கவனியாமல் விட்டு விடலாம். மார்க்ஸிய சித்தாந்தம் கூறும் விதிகளைப் பார்ப்போம்.

முதலாளித்துவ வளர்ச்சியின் முதிர்ந்த கட்டத்தில் வர்க்கப் போராட்டம் மிகவும் தீவிர உருவெடுக்கும் என்று ஒரு விதி கூறுகிறது. வளர்ச்சியடைந்த முதலாளித்துவ நாடுகளிலுள்ள பாட்டாளிகள் முதலாளித்துவத்தை தகர்த்தெறிந்து கம்யூனிஸ அல்லது சோஷலிஸ நாகரிகத்தை ஏற்படுத்தக்கூடிய விதத்தில் ஒன்று திரண்டு எழுவார்கள்.

முன்னேற்றமடைந்துள்ள முதலாளித்துவநாடுகளில் தொழிலாளர்கள் ஒன்று திரண்டு இருக்கின்றனரென்றும் ஆனால் பிற்போக்கிலுள்ள ஆசிய, ஆப்பிரிக்க நாடுகளில் வறுமை அதிகரித்துள்ள தென்றும் நவீனகால மார்க்ஸிஸ்ட் கூறலாம். இந்த இரண்டும் சேர்ந்தே வளர்ச்சியடையும் என்று மார்க்ஸ் கூறியுள்ளார். அத்தகைய வளர்ச்சி, முதலாளித்துவ அமைப்பைக் குலைத்துவிடும் என்று அவர் எண்ணினார். இந்தியா, சீனா, மலாயா, பர்மா ஆப்ரிக்கா போன்ற நாடுகளிலுள்ள மக்கள் அதிக வறுமையில் மூழ்கியுள்ளனர். ஆனால் இங்கிலாந்து, ஜெர்மனி அமெரிக்கா போன்ற நாடுகளிலுள்ள மக்கள் பெரும் தொழிற்சாலைகளில் திரண்டுள்ளனர். அவர்களுக்கு நல்ல கூலி கொடுக்கப்படுகிறது. இதன் காரணமாக சீர்குலைவு ஏற்படுவது தடுக்கப்பட்டுவிட்டது என்று நவீன மார்க்ஸிஸ்ட் இப்போது கூறலாம். இரண்டும் ஒரே இடத்தில் ஏற்படாமல் வெவ்வேறு இடங்களில் ஏற்பட்டதின் காரணமாக மார்க்ஸின் விதி எதிர்பார்த்த பலனை அளிக்கவில்லை.

காலனிகளிலும், இதற்கு முன் காலனிகளாக இருந்த நாடுகளிலும் மக்களுடைய வறுமை அதிகரிப்பதின் காரணமாக புரட்சி ஏற்பட இடமிருக்கிறது என்பதை எடுத்துக்காட்டும்போது மார்க்ஸ் தத்துவமே தவிடுபொடியாகிறது. உற்பத்தி உறவுகளை மாற்றுவதன் மூலம், உற்பத்தி சக்திகள் தாஞக விடுதலை பெறுகின்றன. எனவே அதனால் சுபிட்சம் பெருகும் என்பதற்கும் இனிமேல் இடம் கிடையாது. உற்பத்தி சக்திகள், நிலப்பிரபுத்துவ கட்டத்தைத் தாண்டி வளர்ச்சி பெருத நாடுகளிலேயே புரட்சி ஏற்படுகிறது என்பது இதிலிருந்து தெளிவாகிறது.

ஆனால் உலகாதய வாதிகள் சரித்திரத்தைப் பற்றித் தரும் வியாக்யானம் வேறுவிதமானது. முதலாளித்துவம் வளர்ச்சி பெற்றுள்ள நாடுகளிலேயே புதிய நாகரிகம் உருவாக முடியுமென்பது அவர்கள் கருத்து. ஏனெனில் சோஷலிஸ சொத்து உறவுகளைக் கொண்டு தொழிற்சாலைகள், யந்திரசாதனங்கள், விஞ்ஞான விவசாயம், ஆகிய முதலாளித்துவ சாதனங்களைப் பயன்படுத்தி உலகின் தேவையைப் பூர்த்தி செய்யலாமல்லவா? இந்தக்கருத்தைக் கொண்டிருப்பவர்கள் 'பொற்காலம்' மிக சமீபத்தில் இருப்பதாக நினைத்திருப்பார்கள். உற்பத்தி உறவுகள் மட்டுமே மனிதகுல முன்னேற்றத்துக்கு குறுக்கே நிற்பதால் வர்க்கப் போராட்டம் அதற்கு முடிவேற்படுத்தி இருக்கும். யந்திரசாதனங்களை பூரணமாகப் பயன்படுத்தக்கூடிய விதத்தில் சோஷலிஸ உற்பத்தி அடிப்படையில் கூட்டாகத் திரண்டு இருக்கும் ஒரு சமுதாயம் ஏற்பட்டிருக்கும். ஆனால் இந்தக் கனவு, கனவாகவே முடிந்து விட்டது. காரணம் அன்றைய நாகரிகத்தில் முன்னேறியிருந்த நாடுகள் அடுத்த நாகரிகத்தின் முன்னோடிகளாக இருக்கும் என்று எதிர்பார்த்தது தான்.

இவ்விதி எப்படி உருவாயிற்று என்பதற்கான ஆதாரமும் இதிலேயே இருக்கலாம். தனது காலத்தினுடையவும் நாட்டினுடையவும் சாதனைகளையே பெரியதாகக் கருதுவது எல்லோருக்கும் இயல்பு. அச்சமயம் மேற்கு ஐரோப்பாவின் சாதனைகள் மிகப் பலவாகும். அதன் நாகரிகம்

ஏதோ ஒரு திசையில் முடிவின்றி முன்னேறிக் கொண்டிருப்பதுபோல் தோன்றியது.

மார்க்ஸ் கருத்தை, ஹெகல் கருத்துடன் ஒப்பிட்டால் இரண்டும் ஒன்றுக்கொன்று நேர் விரோதமானதாக உள்ளன. சரித்திர நியதியை மார்க்ஸ் உற்பத்தி முறையில் கண்டார். ஆனால் ஹெகல் அதை மனிதனுடைய ஆத்மாவில் கண்டார். இரண்டினுடைய தவிர்க்கமுடியாத விளைவுகளும் ஒன்றாகவே இருக்கின்றன. ஆதிகால சமுதாயத்திலிருந்து படிப்படியாக சுதந்திரம் அதிகரித்துக் கொண்டுவருவதே சரித்திரம் என்பது ஹெகல் கருத்து. ஒருவனுக்கு சுதந்திரம்; பிறகு சிலருக்கு சுதந்திரம்; அதன் பின் பலருக்கு சுதந்திரம்; கடைசியாக எல்லோருக்கும் சுதந்திரம். ஆதிகால கம்யூனிஸ சமுதாயத்திலிருந்து நிலப் பிரபுத்வ முதலாளித்துவ நாகரிகங்களைக் கடந்து கம்யூனிஸ சமுதாயத்துக்கு வருவதற்கும், மேற்சொன்னவாறு படிப்படியாக சுதந்திரம் பெருவதற்கும் ஒற்றுமை இருப்பதைக் காணலாம்.

ஹெகல் கூற்றுப்படி எல்லோருக்கும் சுதந்திரம் என்பது மனிதனுடைய ஆத்மாவில் உருவகப் படுத்தப்பட்டிருக்கிறது. அதேபோல் மார்க்ஸினுடைய லட்சிய அளவு இங்கிலாந்து ஜெர்மனி போன்ற நாடுகளில் புலப்பட்டிருக்கிறது. ஏனெனில் அப்போது அவைதான் ஐரோப்பாவில் முதலாளித்துவம் வளர்ச்சி பெற்ற நாடுகள். இத்தகைய நாடுகளில் வர்க்கப் போராட்டம் முதலாளித்துவத்தை அழித்து புதிய சோஷலிஸ நாகரிகத்துக்கு வழி வகுக்கும் என்பதுதானே மார்க்ஸிய சித்தாந்தம்!

இன்று நிலவும் நாகரிகத்தின் கர்த்தாக்கள் அடுத்த நாகரிகத்தின் முன்னோடிகளாகத் திகழக் கொடுத்து வைக்கவில்லை. சரித்திரத்தில் அவ்வாறு நடைபெறவில்லை. அது நடக்கக்கூடாத ஒன்றாகவும் தோன்றுகிறது. ஏனெனில் எந்த ஒரு நாகரிகத்துக்கும் ஒரு குறிப்பிட்ட விதமான உற்பத்தி முறையும், சில விதமான கருத்துக்களும், திட்டவட்டமான போக்கும் உறுதியாக அமைந்திருக்கின்றன. அவை கால நிலைக்கேற்ப இல்லை என்பதை யுணர்ந்து மனிதன் அதை மாற்ற முயன்றபோதி

லும் முடியவில்லை. ஏனெனில் அவ்வளவு உறுதியாக அவை அமைந்துள்ளன. மனிதனே அந்த அஸ்திவாரத்தின் மீதுதான் எழுப்பப்பட்டிருக்கிறான். திருத்தவும், மாற்றவும் மனித அறிவுக்கு எவ்வளவு திறமை இருந்த போதிலும் இதை மாற்றமட்டும் முடிவதில்லை. குறிப்பிட்ட ஒரு நாகரிகத்தில் பழகிப்போய்விட்ட பின்னர் அதைத் தூர எறிந்துவிட்டு புதிய வழிகளை மேற்கொள்வது மிகக் கஷ்டமான வேலையாகும்.

மனித வாழ்வில் வர்க்கப் போராட்டம் ஏற்படவில்லை என்று சொல்வதாகாது இது. வர்க்கங்களுக்கிடையே போராட்டம் சரித்திரத்தில் பூராவும் நிகழ்ந்திருக்கிறது. அது எப்படி நடைபெற்றது என்பதைப் புரிந்துகொள்ள வேண்டிய சமயம் இப்போது ஏற்பட்டிருக்கிறது. உணர்ச்சி பூர்வமான விருப்பு வெறுப்பு, அல்லது தனது காலத்திய அல்லது நாட்டினுடைய சாதனையைப் பெரிதெனக் கருதும் தேசபக்தனுடைய ஆர்வம் ஆகியவற்றைப் பற்றி சரித்திர ஆராய்ச்சி செய்பவர்கள் கவலைப்படக் கூடாது. இந்த வர்க்கப் போராட்டத்தின் உருவமும் போக்கும் எப்படி இருந்தது என்பதைப் பூரணமாக ஆராய வேண்டும். உள் நாட்டில் ஏற்றத் தாழ்வு எப்போதும் இருந்து வந்திருக்கிறது—இது ஒன்றோடொன்று போராடும் வர்க்கங்களின் மூலம் புலப்படுத்தப் பட்டிருக்கிறது, என்பது மறுக்க முடியாத உண்மை. நாடுகளுக்கிடையே ஏற்றத் தாழ்வு நிலவுவது ஒரு நாட்டுக்கும் இன்னொரு நாட்டுக்கு மிடையே நடக்கும் யுத்தங்களில் புலப்படுகிறது. இதை நிரூபிப்பதற்காகக் காலத்தை வீணாக்கிக் கொண்டிருக்க வேண்டியதில்லை.

ஆர்னல்ட் டாயின்பீ இந்த இரண்டு போராட்டங்களையும் பற்றி குறிப்பிட்டு இதன் விளைவாக ஒரு நாகரிகம் சீர்குலை வடைகிறது அல்லது தேக்க நிலையை யடைகிறது என்று அவர் நம்புகிறார். உள்நாட்டுப் பாட்டாளிகளுக்கும், வெளிநாட்டுப் பாட்டாளிகளுக்கு மிடையே பேதம் கற்பிக்க மார்க்ஸ் கவனம் செலுத்தவில்லை. இதைச் செய்திருந்தால் அவர் தொழிலாளர்கள் ஒன்று திரளுவதற்கான பெருமையை உள்நாட்டுப் பாட்டாளிகளுக்கும், வறுமை

அதிகரிப்புக்கான காரணத்தை வெளிநாட்டுப் பாட்டாளி கிளுக்கும் அளித்திருப்பார்.

ஒரு அமைப்பைப் பற்றிய பலன் தரத்தக்க பரிசீலனை அதன் உள்தன்மையை ஆராய்வதேயாகும். முதிர்ச்சியடையும் உற்பத்தி சக்திகள் உற்பத்தி உறவுகளுடன் மோதும் கொள்கையின் அடிப்படையிலேயே சரித்திரத்தைப் பற்றிய உலகாயத வாதிகளுடைய வியாக்யானம் அமைந்துள்ளது. இதைப் பரிசீலனை செய்து, சரியாக இல்லாவிட்டால் ஐரோப்பியர்கள் நிராகரித்து விடுவார்கள். ஆனால் ஆசிய மனமோ முட்டை, கோழிக் குஞ்சாக மாறுவது போல சமுதாயத்தினுடைய தன்னியக்கத்தைப் பற்றிய கொள்கையினால் கவரப்பட்டுள்ளது.

சமுதாயம் தானாக இயங்குகிறது. இந்த இயக்கத்துக்கான சாவி உலகாயத விளக்கத்தில் உள்ளது. அந்த சாவி மிகவும் எளிதானதாகக் காணப்படுகிறது. எல்லா உலகங்களைப் பற்றிய ரகசியங்களையும் மிக நன்றாக வெளிப்படுத்துவது போல் இருக்கிறது. ஆனால் அதன் ஒளி எந்த இருளை அகற்றி இருக்கிறது?

சரித்திரமென்பது சரித்திரமே அல்ல என்றுதான் அது புலப்படுத்துகிறது. சரித்திரத்தில் ஒரு குறிப்பிட்ட கட்டத்தின் உயர்விலோ தாழ்விலோ நடந்த இயக்கம், கடந்த காலத்தில் எப்போதும் அப்படித்தான் இருந்திருக்க வேண்டும்; எதிர் காலத்திலும் அப்படியே எப்போதும் தொடர்ந்திருக்கும் என்று அது கூறுகிறது. தற்போது முதிர்ந்த சக்திகளும் மாறாத உறவுகளும் நிலவும் ஒருவித சூழ்நிலை உலகில் காணப்படுகிறது. இந்த சூழ்நிலை இன்றைய சரித்திரத்தின் உச்சத்தில் ஐரோப்பாவையும் அமெரிக்காவையும்—காலடியில் இதர நாடுகளையும் வைத்துள்ளது.

உலகாயத வியாக்யானத்தின் பொதுவிதியைக் கவனிக்கும் போது பல சிரமங்களைப் பார்வையிலிருந்து அகற்றி விடலாம். ஒன்றுக்கு மேற்பட்ட விதிவிலக்கு இருக்குமானால் பொது விதியே பொருந்தாத தாகி விடுகிறது. பொதுவிதி என்ன சொல்கிறது? முதலாளித்துவ சமுதாயத்தின் தன் இயக்கம், அதனுடைய வளர்ச்சி யடைந்த

பகுதிகளான மேற்கு ஐரோப்பாவும் அமெரிக்காவும் கம்யூனிய சமுதாயத்தை ஏற்படுத்தும் என்கிறது. எதிர் காலத்துக்குப் பிரயோகித்த இவ்விதியை கடந்த காலத் துக்கும் பிரயோகித்துப் பார்க்கலாம். இந்தப் பகுதிகள் அவ்விதியின்படி, நிலப்பிரபுத்வ சமுதாய அமைப்புக்கும் அதற்கு முந்திய அமைப்புகளுக்கும் தலைமை தாங்கி இருக்க வேண்டும். வருங்காலத்தை அறிய உதவும் சாவி கடந்த காலத்தை அறியவும் பயன்பட வேண்டுமல்லவா? இந்தியாவும், எகிப்தும் ஒரு காலத்தில் சரித்திரத்தில் உன்னத கட்டத்தில் இருந்தன. ஆனால் இன்றோ அப்படி இல்லை. உலகாயத வாதிகளின் வியாக்யானப்படி இந்நிலை முன்னும் பின்னும் எப்போதும் நிரந்தரமாக இருக்க வேண்டும்.

ஒருபுறம் களிப்பும், இன்னொருபுறம் கண்ணீருமே உலகம் சரித்திரத்தில் இதுவரை கண்டு வந்திருக்கிறது. ஐரோப்பிய அறிஞர்கள் இவ்வளவு தூரம் மாக்ஸிய தத்துவத்தின் உள்தன்மையை ஆராய்ந்து பார்க்காததற்குப் போதிய காரணம் இருக்கிறது. ஒருபுறம் களிப்பும் மறுபுறம் கண்ணீரும் நிலவுகிறது என்றேன். ஐரோப்பாவில் மட்டுமே எப்போதும் களிப்பு நிலவ வேண்டுமென்பதற்காக செய்த வியர்த்தமான முயற்சியே மார்க்ஸ் செய்தது. அதற்குப் பயன்படும் விதத்திலேயே அவருடைய தத்துவம் உருவாயிற்று.

ஐரோப்பாவிலிருந்து கிளம்பும் வேறெந்த நவீன கொள்கையையும் போலவே உலகாயத வாதிகளின் வியாக்யானமும் ஐரோப்பாவின் பெருமையைப் பாடுவதாகவே உள்ளது. உலகாயத வாதத்தைப் பற்றிய இந்த ஆராய்ச்சி—அதுவும் ஆத்மீக தத்துவத்தைப் போன்றதுதான்; உலகாயதவாதம் எதுவும் அதில் இல்லை. எல்லாவற்றுக்கும் மேலாக இது சரித்திர ரீதியானதும் அல்ல என்பதையே புலப்படுத்துகிறது.

# பொருளும் இயக்க சக்தியும்

சரித்திரத்தில் நடக்கும் சம்பவங்களுக்கு முக்கிய காரணமாக இருப்பது எது? இதுபற்றி இரண்டுவிதமான கருத்துக்கள் இருக்கின்றன. பொருளாதார சக்திகளே காரணமென்று பியர்டு தம்பதிகள் அமெரிக்க நாகரிக வளர்ச்சி பற்றி எழுதியுள்ள புத்தகத்தில் கூறியிருக்கின்றனர். ஆனால் மெய்நெக் என்ற வேறொரு பேராசிரியரோ நமக்கு அப்பாற்பட்ட இயக்க சக்தி யொன்று சரித்திரத்தை உருவாக்குகிறதென்று கூறுகிறார். இவர்கள் எல்லோரும் நமது நூற்றாண்டைச் சேர்ந்தவர்கள். இவர்கள் எழுதியுள்ள புத்தகங்களில் பல குறைகள் இருக்கின்றன என்பது உண்மைதான். சரித்திர மூலத்தைப் புரிந்துகொள்ள அவர்கள் கூறுவதே போதுமென்று சொல்ல முடியாதென்றாலும், அதற்குப் பெருமளவு உதவுகிறது என்பதில் சந்தேகமில்லை.

ஜெர்மனியிலுள்ள பெர்லின் சர்வகலாசாலையில் அங்கன் என்ற பேராசிரியர் ஒருவர் இருக்கிறார். என்னைப் போலப் பலர் சரித்திரத்தில் ஆர்வம் கொள்ளக் காரணமாயிருந்தவர் அவரே. கடந்த நூற்றாண்டுகளாக பிரிட்டனின் வெளி விவகார விஷயங்கள் பற்றி அவர் எழுதியுள்ள புத்தகத்தில், இந்தியாவில் ராணுவ ஆட்சி நடத்துவதற்கு தேவையான பாதுகாப்புகளை அடிப்படையாகக் கொண்டே அது தனது வெளிநாட்டுக் கொள்கையை நிர்ணயித்து வந்திருக்கிறதென்று நிரூபிக்கிறார். சரித்திரத்தை உருவாக்குவது பொருளாதாரமா, நமக்கு அதீதமான சக்தியா என்ற பிரச்னையைத் தீர்த்துவைக்காவிட்டாலும், சரித்திர சம்பவங்கள் அகஸ்மாத்தாக நடப்பவையல்ல வென்றும், அவற்றை ஏதோ ஒன்று உருவாக்குகிறதென்றும் அவர் தெளிவாக்கியிருக்கிறார். அந்த அளவுக்கு அது மிகவும் உபயோகமான புத்தகம் என்று கூறலாம்.

இயக்க சக்தி—பொருளாதார சக்தித் தகராறு சரித்திரத் துறையில் ஓரளவு எல்லை மீறிவிட்டதென்றே சொல்லவேண்டும். அவை இரண்டும் வெவ்வேருன மாறுபட்ட சக்திகள் என்று நினைத்து பலர் அவற்றைப்பிரித்து வைக்க நினைக்கின்றனர். அவை அவ்வாறு ஒன்றுக்கொன்று முரண்பட்ட சக்திகள் அல்ல. ஒன்று மற்ருென்ருக மாறமுடியும்; மாறியும் இருக்கிறது. அம்மாறுதல்களை சரிவரப் புரிந்துகொண்டாலன்றி பல தவறுகள் நேர இடமுண்டாகும்.

சரித்திரத் துறையைமட்டும் எடுத்துக்கொண்டால் பொருள் என்பதற்கு பொருளாதார, சமூக, ஆக்க வேலையென்றும், சக்தி என்ருல் மனிதர்களுடைய பொது லட்சியங்கள், சமூகம் கடைப்பிடிக்க முயலும் பாதையென்றும் அர்த்தம் செய்துகொள்ளலாம். இவை இரண்டுக்குமிடையில் சம்பந்தமே இல்லை என்று கூறுவது தவறு. மூன்று வித உறவுகள் அவைகளுக்கிடையில் இருக்கலாம். 1. ஒன்றையொன்று சார்ந்திருப்பது. 2. எவ்வித சம்பந்தமுமின்றி அவை தனித் தனியாக இயங்குவது. 3. சுதந்திர அந்தஸ்து கொண்டவை என்ற முறையில் அவை இணைக்கப்படுவது. முதலிரண்டு வகைகளைப் பலர் பின்பற்றியிருக்கின்றனர். குறிப்பாக சரித்திரத்தை உருவாக்கும் தலைவர்களும் சரித்திரம் எழுதும் ஆசிரியர்களும் இப்படிச் செய்திருக்கிருர்கள். இதனுல் பல தவறுகள் உண்டாகியிருக்கின்றன.

பொருளும் சக்தியும் ஒன்றையொன்று சார்ந்திருப்பது என்ருல் என்ன? ஒரு பொது லட்சியம் நிறைவேறியவுடன், அதிலிருந்து எல்லா நன்மைகளும் தாமாகவே வந்துவிடுமென்று நினைப்பதுதான் அது. நமது பொருளாதார லட்சியங்கள் சரியாக இருந்தால், அதிலிருந்து பொது லட்சியங்கள் தாமாகவே உருவாகுமென்று ஸ்மித்—மார்க்ஸ் கோஷ்டியினர் நம்புகின்றனர். அதுமாதிரியே, காந்தியவாதிகள் கூறுவது என்னவென்ருல், நமது பொதுலட்சியம் சரியாக இருந்தால் பொருளாதார லட்சியங்கள் தாமாகவே உருவாகிவிடுமென்பதுதான். இப்படி ஒன்றிலிருந்து மற்ருென்று தானுகவே பிறக்குமென்ற மனப்

பான்மை சரித்திரத்தை உருவாக்குவதிலும், புரிந்து கொள்வதிலும் பல கஷ்டங்களை உண்டாக்கி யிருக்கிறது. இயக்க சக்தியைத் தலைகீழாக்கினுல் அதுவே பொருளா தாரம்; பொருளாதாரத்தைத் தலைகீழாக்கினுல் அதுவே இயக்க சக்தி என்று நினைப்பதுபோலத் தோன்றுகிறது இக்கருத்து பொருளாதார லட்சியத்தின் தன்மையை உணர்ந்து அதற்கு இயக்க சக்தியானது போதிய முக்கியத் துவம் அளிக்கவில்லையென்றுல், தனது துறையில்மட்டும் நிறைவு பெற பிரகிருதி முயற்சிக்கிறது. இயக்க சக்தி அப்போது ஒன்றும் செய்யமுடியாது வளர்ச்சியே நின்று விடுகிறது. இந்நிலையில் சக்தியானது பிரகிருதி மீது பழி தீர்த்துக் கொள்வதைப்போல புதுவழி வகுத்துக் கொள் ளத் தொடங்குகிறது. பிரகிருதியை அது புரிந்துகொள்ள வில்லை என்பதையே இது மீண்டும் காட்டுகிறது. இப்படி ஒன்றையொன்று சார்ந்திருப்பதாக நினைப்பதிலுள்ள தவறை இப்போது பலர் உணர்ந்துவிட்டனர்.

அதன் விளைவாக சிலர் இயக்க சக்தியே முக்கிய மென்றும், வேறு சிலர் பிரகிருதியே முக்கியமென்றும் கூறத் தொடங்கியிருக்கின்றனர். ஒன்றை முக்கியமெனக் கருதுபவர்கள் மற்றென்றைப் புறக்கணித்துவிட்டனர்.

சரித்திரத் தத்துவத்தை விளக்கும் தற்கால நூல்கள் பல இருக்கின்றன. இவற்றை எழுதிய நூலாசிரியர் களும், சோஷலிஸ்டுகளைப்போன்ற தீவிர அரசியல் வாதி களும்கூட முற்கூறிய இரண்டு தனித்தனிக் கோயில்களில் வழிபடத் தொடங்கிவிட்டனர். இது தவறு. ஏனெனில் இவ்விரு சக்திகளையும் புரிந்துகொண்டு அவற்றை அதன தன் இடத்தில் வைக்காவிட்டால் ஒன்றையொன்று கெடுத்துவிடும். எனவே சரித்திரத்தை உருவாக்குவதி லும், எழுதுவதிலும் கையாளக்கூடிய மிக நல்லமுறை ஒன்று இருக்கிறது. அது என்னவென்றுல் பொது லட்சி யங்களையும், பொருளாதார லட்சியங்களையும்—அதாவது சக்தியையும் பிரகிருதியையும்—ஒரு புது முறையில் இணைக்கவேண்டும். இந்தியாவில் இப்போது மத்திய சர்க் காரும், ராஜ்ய சர்க்கார்களும் இணைக்கப்பட்டிருக்கின்றன அல்லவா?

பொருள்—சக்தி புது இணைப்பும் இப்படித்தான் இருக்கவேண்டும். இவை இரண்டும் தனித் தனியாக இயங்கும் சக்திகளே என்பதை ஏற்றுக்கொண்டு அந்த அடிப்படையில் அவற்றை இணைத்துப் பொருத்த வேண்டும். இதைப்போன்ற இணைப்பு அவசியமென்பதை இப்போது சிலர் உணரத் தொடங்கிவிட்டனர். இதற்காக அவர்கள் பாடுபட்டு வருகின்றனர். அது உருவானால் சரித்திரத்தை சரியானபடி புரிந்துகொள்வதற்கு மிகவும் உதவியாக இருக்கும்.

ஒவ்வொரு சமூகமும், நாகரிகமும் குறிப்பிட்ட ஒரு துறையில் உயர்வு பெற்று வளருவதே சகஜமாக இருக்கிறது. ஆத்மீகத் துறையில் ஒரு சமூகம் முன்னேறினால் மற்ற துறைகளை அது மறந்து விடுகிறது. யந்திர அபிவிருத்தியில் புகுந்தால் அவ்வழியிலேயே அங்கிருப்பவர்களின் நாகரிகம் உருவாகிறது இப்படி ஒரே திசையில் போகும் வழக்கம் தொன்று தொட்டு இருந்து வருவதைப் பல இடங்களில் நாம் காண்கிறோம். இதைப்பற்றி இருவித அபிப்பிராயங்கள் இருக்கலாம்.

யந்திர நாகரிகத்தை அடிப்படையாகக் கொண்ட ஒரு சமுதாயத்தை எடுத்துக் கொள்வோம். தங்களுடைய கருத்துக்குப் புறம்பானதென்று கூறி அதை அடியோடு ஒதுக்கித் தள்ளிவிடலாம் இவர்கள் எவ்வளவு தான் உரத்துச் சத்தம் போட்டாலும்கூட சமூகத்தின் போக்கை அதிகமாக மாற்றிவிட முடியாது. மற்றொரு கோஷ்டியை எடுத்துக் கொள்வோம். இவர்கள் செய்யும் தவறு என்ன தெரியுமா? யந்திர வளர்ச்சி ஒன்றே போதும்; வளர்ச்சி பெற வேண்டிய துறைகளே வேறு இல்லை என்ற நினைவு அவர்களுக்கு. ஒரு தலைப் பட்சமான முன்னேற்றத்தை முழு வளர்ச்சி என்று நினைத்து அதற்காக இவர்கள் அரும்பாடு படுகிறார்கள். அதுவும் தவறு.

இப்படி அரைகுறை வளர்ச்சியை முழு வளர்ச்சி என்று நினைத்து அதையே நமது லட்சியாகக் கொள்வதால் பல கஷ்டங்கள் ஏற்படுகின்றன. நாம் இருக்கும் சமூகத்தை அலசி ஆராய்ந்து பரிசீலனை செய்வதற்கு இந்த மனப்பான்மை இடைஞ்சலாக இருக்கிறது. பல்லாயிரக்

கணக்கான வருடங்களுக்கு முன் உலகில் 'டினோஸர்' என்ற ஒரு ஜந்து இருந்தது. உருவத்தில் ஓரளவு முதலை மாதிரி யிருந்தபோதிலும் அளவில் அதைவிடப் பன் மடங்கு பெரியது. குறிப்பிட்ட ஒரு முறையில் ஒருதலைப் பட்சமான முழு வளர்ச்சியை இயற்கை கொடுத்துப் பார்க்க விரும்பியதைப்போல அந்த ஜந்து இருந்தது. இப்போது அந்த வகையே அழிந்து விட்டது. வேறு ஒரு முறையில் வளர்ச்சி பெற்ற மற்ற ஜந்துக்கள் அதை அழித்து விட்டிருக்கலாம். அல்லது தங்களிடமுள்ள குறை காரணமாக டினோஸர்கள் தாங்களாகவே மறைந் திருக்கலாம் உடல் முழுவதும் சமமாக வளரவேண்டுமே தவிர ஏதோ ஒரு பகுதி மட்டும் பெருத்துக்கொண்டே போனால், அதை வியாதியின் அறிகுறி என்று சொல் வார்கள். ஒரு சமூகத்தையோ ஒரு வகை நாகரிகத்தையோ எடுத்துக்கொண்டால் இந்த உண்மை அதற்கும் பொருந் தும். ஒரே துறையில் முன்னேறி மற்ற பக்கங்களைக் கவனியாமல் விட்டு விட்டால் அந்த ஒரு தலைப்பட்சமான வளர்ச்சியின் கனத்தைத் தாங்க மாட்டாமல் அந்த நாக ரிகமே அழிந்துவிடும். ஆரம்பத்தில் நாகரிகங்கள் எல்லாம் பல துறைகளிலும் சமவளர்ச்சி பெற்று நன்றாகத் திகழக் கூடியவையாகவே பிறக்கின்றன காலம் செல்லச் செல்ல தன்னிடமுள்ள குறைகளாலோ அல்லது வெளி நிர்ப்பந் தங்களினாலோ இந்த நிலை மாறுகிறது. சமூகத்தில் வளர்ச்சி ஏற்பட்டால் பொதுவாக வேகமும் பிறக்கிறது. அந்நாட்டு மக்கள் தங்களுக்குள்ளாகவே வர்க்கப் போராட் டத்தில் ஈடுபடுகிறார்கள்—தமது நிலையை உயர்த்திக்கொள் வதற்காக. வெளியிடங்களிலிருந்து வரும் தாக்குதல்களை சமாளிக்கும் சக்தி ஏற்படுகிறது. பிற சமூகங்களிலிருந்து செல்வமும், உரமும் பெற்று உயரும் சமூகங்களைக்கூட நாம் பார்த்திருக்கிறோம்.

ஒரு சமூகம் முழு வளர்ச்சியும் பெற்ற பிறகு இரண்டு விதப் போராட்டங்களை அது சமாளிக்க வேண்டி இருக் கிறது. தனக்குள்ளேயே நடக்கும் வர்க்கப் போராட்டம் ஒன்று; வெளி சமூகங்களுடன் நடத்த வேண்டியிருக்கும் போராட்டம் இரண்டாவது. முதலாவது போராட் டத்தை சமாளிக்கக் கையாளப்படும் முறை என்ன

வென்றால் குறிப்பிட்ட வர்க்க நலன்களை அவ்வப்படியே பாதுகாப்பதாக போலி நியாயம் கூறி ஜாதி முறை வகுப்பதுதான். இப்படியே வர்க்கப் போராட்டத்தை சமாளிக்க ஜாதிகள் சிருஷ்டிக்கப்படுகின்றன. இரண்டாவது வகைப் போராட்டம் உண்மையில் கஷ்டமாகவும் அதன் சக்திக்கு மீறியதாகவும் ஆகி விடுகிறது. அந்த நிலையில் ஒரு நாகரிகம் அழிந்தோ அல்லது முக்கியத்துவம் குறைந்தோ போகிறது ஜாதிகளை உண்டாக்குவதன் மூலமாக அச் சமூகத்தின் அழிவு ஓரளவு தாமதிக்கப்படலாம். ஆனால் முடிவென்ன என்பதில் யாருக்கும் சந்தேகம் இருக்க முடியாது. ஒரு புறம் ஜாதிகளின் தாக்குதல், மறு புறம் வெளி சக்திகளின் தாக்குதல்—இவ்விரண்டுக்குமிடையில் அந்த சமூகம் அழிவதைத்தவிர வேறு வழி என்ன ?

ஒரு சமூகத்தினுள்ளே வர்க்கங்கள் ஜாதிகளாகவும், ஜாதிகள் வர்க்கமாகவும் மாறுகின்றன. அதற்கு வெளியிலே மற்றொரு மாறுதலும் நடக்கிறது; வெளி சமுதாயங்களுடைய பலமும் சில சமயங்களில் உயர்ந்தும் சில சமயங்களில் தாழ்ந்தும் போகின்றன. இது வரையில் இருந்து மறைந்த சமுதாயங்கள் எல்லாவற்றிலும் இது நடந்திருக்கிறது.

# வர்க்கமும் வருணமும்

ஜாதிப் பிரிவினை இந்தியாவில் மட்டும்தான் இருக்கிறதென்று சிலர் நினைக்கலாம். நமது மக்களுடைய உள்ளத்தில் பல் நூற்றுண்டுகளாக ஊறித், திட்டமான உருவம் பெற்றுவிட்டவை என்ற முறையில் நோக்கினுல் ஜாதிகள் இந்தியாவில் மட்டுமே இடம் பெற்றிருப்பதாக கூறுவதில் தவறில்லை. ஆனுல் மற்றொரு விதமாகவும் அதைக் கூறலாம். ஒரு நாட்டிலுள்ள பல்வேறு வர்க்கங்கள் தங்களுக்கு என்று ஸ்திரமான ஒரு இடத்தை ஏற்படுத்திக்கொண்டு பரஸ்பர தகராறுகளின்றி வாழுவதே ஜாதிமுறை என்றும் கூறலாம். அந்த அர்த்தப்படி பார்த்தால் ஜாதிகள் உலகமெங்கும் இருக்கின்றன. பிறப்பினுலும், மத முத்திரை பெறுவதாலும் மட்டும் ஜாதிகள் வந்துவிடாது.

வர்க்கத்துக்கும் ஜாதிக்கும் உள்ள வித்தியாசம் என்ன? அந்தஸ்தும் வருமானமும் உயருவதன் மூலம் ஒருவருடைய ஜாதியும் உயருவதில்லை. வர்க்கம் என்பது இஷ்டப்படி உயரவோ தாழவோ கூடிய ஜாதி. ஜாதி என்பது இஷ்டப்படி நகரமுடியாத வர்க்கம்; நாளடைவில் ஒவ்வொரு சமூகத்திலும், நாகரிகத்திலும் வர்க்கங்கள் ஜாதிகளாகவும் ஜாதிகள் வர்க்கங்களாகவும் மாறியிருக்கின்றன. உள்நாட்டில் நடக்கும் ஏறக்குறைய எல்லா சம்பவங்களுக்கும் இந்த மாறுதலே காரணமாக இருந்திருக்கிறது. சமத்துவம், நியாயம் ஆகியவற்றை நிலைநாட்டும் நோக்கத்துடன் இந்த மாறுதல் ஆரம்பித்தபோதிலும் நடைமுறையில் பல தீமைகள் உண்டாவதற்கும் அதுவே காரணமாயிருந்திருக்கிறது,

பண்டை கால ரோமாபுரியில் மேல் தரத்தினருக்கும், கீழ்த் தரத்தினருக்கும் இடைவிடாத வர்க்கப் போராட்டம் நடந்தது. நாட்டின் பலமும் பொருளாதார சக்தியும் வளர்ந்த ஒவ்வொரு சமயத்திலும் மேற்படிபோராட்டமும்

தீவிரமாயிற்று. அதனால் எல்லா வர்க்கங்களும் தங்களுடைய நிலையை உயர்த்திக்கொள்ள முடிந்தது. சில சமயங்களில் அப்போராட்டம் எல்லைமீறிப் போய்விட்டது. இதனாலும், பல வெளி சக்திகளின் தாக்குதலாலும் சமுதாயம் நிலைகுலைந்து சமத்துவம், நீதி ஆகியவற்றை அஸ்திவாரமாகக்கொண்டு ஸ்திரமான ஒரு சமுதாயம் உருவாக வேண்டுமென்ற கோரிக்கை கிளம்பியது. இப்படி ஜாதி, வர்க்கமாகவும், வர்க்கம் ஜாதியாகவும் பலதடவை மாறியிருக்கிறது. இந்த மாறுதல் படிப்படியாகவே நடந்திருக்கிறது. ரோமாபுரியின் செல்வத்தையும், அதிகாரத்தையும் பெருக்குவதற்கு ஜாதிகளே ஒரு காலத்தில் கருவிகளாக இருந்திருக்கின்றன. மேல் தரத்தினருடன் சம அந்தஸ்து பெற வேண்டுமென்று சாதாரண ரோமாபுரிப் பிரஜை நினைத்தான். அதுவே வர்க்கப் போராட்டத்துக்கு தூண்டு கோலாக இருந்தது. பெற்றதைப் பேணிப் பாதுகாத்துக் கொள்வதற்கும் சமுதாய சீர் குலைவைத் தடுப்பதற்கும் பிறகு ஜாதி பயன்பட்டது. ஆனால் எவ்வளவு முயற்சித்தபோதிலும் ஜாதி அஸ்திவாரத்தில் நிர்மாணிக்கப்பட்ட சமுதாயம் எதுவும் நீதியின் நிலைக்களனாக விளங்கமுடியாது.

இந்த உண்மை அங்கு தெரிந்துவிட்டது. கொஞ்ச காலத்திற்குப் பிறகு சமுதாயம் அங்கு நிலைகுலைய ஆரம்பித்தது. ஒருபுறத்தில் தாங்கள் முன்னேற முயற்சித்துக் கொண்டிருந்த அதே சமயத்தில் மேற்கூறிய மாறுதலும் மறுபுறத்தில் நடந்துகொண்டிருந்தது. 'லாடிபண்டியா' என்ற பெரிய பண்ணைகள் நிறுவப்பட்டன. இப்போதுள்ள கூட்டுப் பண்ணை எதற்கும் அவை பின் வாங்கியவை அல்ல. அவை காரணமாக ஜாதி வர்க்கமாகவும் வர்க்கம் ஜாதியாகவும் மாறுவது நின்றதா? இல்லை. அப்பண்ணையிலிருந்த சில குறைபாடுகளாலும், வெளியிலிருந்து வந்த எதிர்ப்பினாலும் அந்தப் பண்ணைகளே அழிந்துவிட்டன.

இரண்டு முக்கிய ஜாதி ஒழிப்பு இயக்கங்கள் புறக்காலத்தில் இந்தியாவில் நடந்திருக்கின்றன. ஒன்று சுமார் 2600 வருடங்களுக்கு முன் ஆரம்பித்து சுமார் 500 வருட

காலம் நடந்தது. ஜாதிப் பிரிவினை அநீதிகளை எடுத்துரைத்து, சீர்திருத்தங்கள் செய்வதே அவ்வியக்கத்தின் நோக்கமென்று அக்கால இலக்கியங்களிலிருந்து தெரிகிறது. பிறகு ஜாதிக்கட்டுப்பாடுகள் ஓரளவு தளர்ந்து சமுதாயத்தில் பொதுவாக ஒரு வேகம் ஏற்பட்டது. மதத்தைவிட வர்க்கத்துக்கு முக்கியத்துவம் அதிகரித்தது. ஓரிடத்தில் வேலைசெய்பவர் பிக்ஷுவாக வேண்டுமென்றால் எஜமானரின் அனுமதியின் பேரில் விடுதலை பெற்ற பிறகே அவர் தீட்சை பெறமுடியும். கடனாளிகள் பிக்ஷுக்களாக முடியாது. இவ்வாறு கௌதமபுத்தர் ஒரு காலத்தில் தடை விதிக்கவேண்டிய நிலை உண்டாயிற்று. அரசியல் பலமும் பொருளாதார சுபிட்சமும் வளர வளர ஜாதி முக்கியத்துவம் குறையத் தொடங்கியது. நமது நாட்டில் பல சிற்றரசர்கள் ஆண்டுவந்த பகுதிகள் ஒன்று பட்டதால் உள் நாட்டு யுத்தங்கள் குறைந்தன. வர்த்தகமும் கைத்தொழிலும் விவசாயமும் முன்னேறின. தேசிய வருமானம் அதிகரித்தது. ஒருதடவை ஐரோப்பியரின் படையெடுப்பைக்கூட அந்த நாளில் எதிர்த்து நின்று இந்தியாவின் அருகில்கூட வராமல் செய்து விட்டது.

பல தூர தேசங்களுக்கு இங்கிருந்து மத, கலாசார தூது கோஷ்டிகள் சென்றன. மற்றவர்களை அடிமைப்படுத்தி கப்பம் கறந்து அவர்கள்மீது ஆதிக்கம் செலுத்தும் வழக்கம் நம்மிடம் என்றுமே இருந்ததில்லை; நட்புறவை பலப்படுத்துவதற்காகவே மேற்படி கோஷ்டிகள் சென்றன. வர்த்தகத்திற்காகவும் இந்தியர் பல நாடுகளுக்குச் சென்றனர். அப்படி வர்த்தகம் பெருகுவதற்கு வேண்டிய உற்பத்தியும் நமது நாட்டில் நடந்திருக்கிறதென்றால் இந்தியாவின் உற்பத்தி சக்தியை சுலபமாக நாம் யூகித்துக் கொள்ளலாம். விதியின்மேல் பாரத்தை போட்டுவிட்டு, கையைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்திராமல், சுய முயற்சியிலும் பகுத்தறிவிலும் இந்தியர்களுக்கு நம்பிக்கை வளர ஆரம்பித்தது. பொது விவகாரங்களில் ஊக்கமும், அறிவுத் தெளிவும் ஏற்பட்டன. ஜாதிப் பிரிவினையை எதிர்த்தும், வர்க்கங்களுக்கு சாதகமாகவும் இவ்வியக்கம் நடந்த அதே சமயத்தில் சமூகம் முழுவதிலும் ஒவ்வொரு

துறையிலும் வேலை முறைகளில் அபிவிருத்தி உண்டா யிற்று.

அந்த இயக்கம் ஓய்ந்தது. சுமார் 400 வருஷகாலம் இந்தியசமுதாயம் சக்தியற்று ஒடுங்கிக்கிடந்தது. அதற்குப் பிறகு இரண்டாவது ஜாதி எதிர்ப்பு இயக்கம் உருவா யிற்று. அது நேரடித் தாக்குதலில் இறங்கிற்று. அநீதி யையே அடிப்படையாகக் கொண்டது ஜாதி என்று அக்கு அலக்காக அலசிக் காட்டிற்று அவ்வியக்கம். ஆனாலும் ஜாதியை அது வேருடன் ஒழித்துவிட முடியவில்லை. முன் இயக்க சமயத்தில் நடந்தது போல இந்த சமயத்திலும் வேலைத் திறமையில் அபிவிருத்தி, பலதுறைகளில் பொது வான முன்னேற்றம் முதலியவை காணப்பட்டன. முன்னை விட உயர்ந்த முறையில் இந்த அபிவிருத்தி நடந்தது.

ஜாதி எதிர்ப்பு இயக்கங்கள் அவை. ஜாதிக்கு ஆதர வளித்த காலங்களும் சரித்திரத்தில் உண்டு. மேற்கூறிய இரண்டு ஜாதி எதிர்ப்பு இயக்கங்களுக்கு இடையிலுள்ள காலத்தையும், சமீபத்தில் நடந்து முடிந்திருக்கும் காலத் தையும் எடுத்துக் கொண்டால் இவை, ஜாதி இயக்கங்கள் வளர்ந்தோங்கிய காலமென்று கூறலாம். இவற்றில் முத லாவது இடைக்காலத்தில் ஜாதிப் பிரிவினை கெடுபிடிகள் மிகவும் கடுமையாக இல்லை. அக்கால சமூக நூல்களில் சமரச மனப்பான்மையே அதிகமாகக் காணப்படுகிறது. மக்களுடைய அனுமதிக்கு உட்பட்டு ஜாதிகள் இருக்கலா மென்றும், உணவு, விவாகம் முதலியவிஷயங்களில் காலத் திற்கேற்றபடி நடந்துகொள்ள வேண்டு மென்றும் கூறப் பட்டிருக்கிறது. இந்திய சமுதாயம் இப்போது பலஹீன மான நிலையிலிருந்தது. வெளிநாட்டுப் படையெடுப்பைத் தடுக்கும் சக்தி அதற்கு இருந்ததென்று நிச்சயமாகக் கூற முடியவில்லை. இருந்தாலும் எதிரிகளை சுலபமாக நுழைய விடாதபடி எதிர்க்கவும், வந்துவிட்டால் அவர்களையும் தன்னுடன் இரண்டறக் கலந்துவிடும்படி ஜீரணித்துக் கொள்ளவும் போதிய சக்தி பெற்றிருந்தது.

ஜாதி இயக்கம் வளர்ந்தோங்கிய இரண்டாவது காலம் சுமார் 1200 வருடங்களுக்கு முன் ஆரம்பித்து சமீபத்திலேயே முடிந்திருப்பதாகத்தோன்றுகிறது. ஜாதிக்

கட்டுப்பாடுகள் இதில் மிகவும் கடுமையாக இருக்கின்றன. ஆனால் அதுவும்கூட ஆத்மதத்துவத்துக்குப் பொருத்தமானதுதான் என்றும் நித்தியப் பிரமாணம் வேறு உலகப் பிரமாணம் வேறு என்றும் கூறி அபூர்வ வித்தியாசங்களைக் கற்பித்து, முன்கூறிய மட்டரகமான ஜாதிகள் மலிந்த சமூகத்திற்கு சங்கராச்சாரியார் பலம் தேடிக் கொடுத்தார். ஆனால் இந்தியாவின் பலஹீனத்துக்கு ஜாதிகளையோ சங்கராச்சாரியாரின் மகத்தான தவறுகளையோ காரணமாகக் கூறுவதில் பயனில்லை.

ஏழ்மையும், வெளியாரின் படையெடுப்புத் தொல்லையும் இந்தியாவின் பலத்தை வெகுவாகக் குறைத்துவிட்டன. இந்த இரண்டு தீமைகளுக்கும் காரணம் என்னவென்று கேட்டால், குறிப்பிட்ட ஒரு திசையில் மட்டும் இந்தியாவின் முன்னேற்றம் இருந்தது தான். ஆகையால் மற்ற துறைகளில் முன்னேறிய நாடுகளுக்கு நமது நாடு அடிமையாயிற்று. ஜாதியும், ஜாதி புத்தியும் தூங்கிக் கிடந்த சமூகத்துக்கு பாதுகாப்பாக இருந்தன. ஆபாசக் குப்பையாகிய சமூகத்தைப் பாதுகாக்க அதிக மட்டமான ஜாதிப் போர்வையை தயாரித்தது மிகவும் ஆச்சரியமான விஷயம்.

ஜாதி, சங்கராசாரியார் தத்துவம் ஆகியவற்றின் உதவியால் ஸ்தம்பித்து நின்றதைவிட, அவற்றின் உதவியின்றி சமுதாயம் நசித்துப் போயிருந்தாலே நல்லதல்லவா? என்று சிலர் கேட்கிறார்கள். அப்படிப்பட்ட விவாதத்தினால் ஒரு பிரயோஜனமுமில்லை. சமுதாயம் உறங்கிக்கிடந்த காலம் மலையேறிவிட்டது. மகாத்மா காந்தியின் சேவையால் இந்தியாவிலுள்ள ஜாதிப் பாகுபாடுகள் கலகலத்துவிட்டன. முன்பு காணப்பட்ட ஒருதலைப்பட்சமான முன்னேற்றம் மாறி, நாலாதுறைகளிலும் சம வளர்ச்சி ஏற்படத் தொடங்கிற்று. ஆனால் இதற்கு காந்திஜி ஒருவரே காரணமென்று கூறமுடியாது. அவருக்கு முன்னால் பல மத, தத்துவ இயக்கங்களை சேர்ந்த பெரியார்கள் இருந்திருக்கின்றனர். அவர்களுடைய விசால உள்ளம் இந்த விஷயத்தைப்பற்றி சிந்தித்து ஏற்கனவே வேலை தொடங்கியிருந்தது. அவர்கள் பண்படுத்திய பூமியில் தான்

காந்திஜி பொன் ஏர் பிடித்தார் என்பதை மட்டும் மறந்து விடக்கூடாது.

ஜாதி இப்படி வர்க்கமாகவும், வர்க்கம் ஜாதியாகவும் மாறுகிறதே இதில் ஏதாவது ஒரு நியதி இருக்கிறதா? எவ்வளவு வருஷங்களுக்கு ஒருமுறை இது நடக்கிறது? சரித்திர தத்துவத்தில் ஈடுபாடு உடையவர்கள் இவ்விஷயங்களை ஆராயலாம். இந்தியா சம்பந்தமாக இவற்றை ஆராய்வதற்குப் போதிய புள்ளி விவரங்கள் நமக்குக் கிடைக்கவில்லை. இங்கே உள்ளதைப் போன்ற ஜாதிப் பிரிவினை வேறு எங்கும் இல்லை. இங்குமட்டும் எப்படி உண்டாயிற்று? முன்னேற்றத்துக்கு முட்டுக்கட்டை போட்டு முடக்கிவிட்ட ஜாதி முறையானது எல்லா மக்களும் ஒப்புக்கொள்ளக்கூடியவாறு பல்லாயிரக்கணக்கான வருஷங்கள் எப்படி நீடித்தது? நிலைமைக்குத் தக்கவாறு வளைந்துகொடுக்கக்கூடிய சக்தி அதற்கு இருந்திருக்கிறது. விதவிதமான இனத்தவரும் ஒத்துப் போகக்கூடிய முறையில் ஜாதிகளும் வளைந்து கொடுத்திருக்கின்றன என்றால் அதைவிட ஆச்சரியமான விஷயம் வேறு ஒன்றுமில்லை. சமத்துவத்தை நிலைநாட்டுவதற்காக முற்பட்ட மிகப் பிரமாண்டமான இயக்கம்கூட ஜாதிகளை ஒன்றும் செய்ய முடியவில்லை. ஆனால் மத, ஆத்மீகத் துறைகளில் தான் இவ்வாறு ஒத்துப்போக முடிந்ததேதவிர சமூகத்துறையில் முடியவில்லை ஜாதிகளும் புதிதாக வந்த சமத்துவ இயக்கங்களும் ஒன்றுக்கொன்று பொருந்தாமல் பல கஷ்டங்கள் உண்டாயின. அநீதிகள் அதிகரித்தன. குறிப்பிட்ட இனங்களைச் சேர்ந்தவர்கள் இன்ன ஜாதியினர் தானென்றும் குறிப்பிட்ட முகஜாடை உடையவர்கள் இன்னின்ன ஜாதியை சேர்ந்தவரென்றும்கூட கூறுபோட ஆரம்பித்து விட்டனர். இதனால் ஜாதி ஒழிப்பு வேலை மிகவும் கடினமாயிற்று. ஆயினும் அது நின்றுவிடவில்லை. இனம், மொழி, மதம், நிறம், முதலிய பல விஷயங்களைக் காட்டி பலர் மனிதர்களைப் பிரித்துவைக்க முயற்சித்தபோதிலும், ஒற்றுமை இயக்கம் மகத்தான பலம் பெற்று இந்தியாவில் வளர்ந்தோங்கியது. இப்படிப்பட்ட இயக்கங்களின் விளைவாகவே இந்தியாவுக்கு பலர் கண்டு வியக்கும் பொறுமையும், சகிப்புத்தன்மையும், ஏகாதிபத்திய எதிர்ப்பும் வந்

திருக்கலாமென்று தோன்றுகிறது. இப்படி ஜாதி—வர்க்க மூாறுதல் நடக்கும்போது ஒரு முக்கிய விஷயத்தை நாம் கவனிக்க வேண்டும் உள்நாட்டில் ஜாதி வித்தியாசங்கள் அதிகரிக்கும்போது வெளிநாட்டில் நமக்கு செல்வாக்கு குறைந்திருக்கிறது. இது உடனடியாக நேராமல் இருக்கலாம். சற்று முன் பின்னுகவாவது நடந்தே இருக்கிறது. பல துறைகளிலும் சமூக முன்னேற்றம் ஒரேமாதிரி சமமாக நடந்து அபிவிருத்தி தோன்றும்போது வர்க்கங்களும் பலத்த மாறுதல்களுக்கு உள்ளாகின்றன.

வர்க்கத்திற்கும் ஜாதிக்கும் வித்தியாசம் தெரியாதவர்கள் அமெரிக்காவில் வர்க்கப் பிரிவினை கிடையாதென்று சாதிக்கிறுர்கள். அங்குள்ள ஐரோப்பியப் பழங்குடி மக்கள் தங்களுடைய ஜாதி அபிமானம் முழுவதையும் கைவிடவில்லை. ஐரோப்பாவில் பொதுவாக வர்க்கங்கள் உயர்ந்த காலத்தில்கூட அப்படிப் புதிதாக உயர்ந்த வர்க்கத்தினருடன் பழைய பிரபுக் குடும்பங்கள் கலப்பு மணம் செய்துகொள்ளவோ, ஜனநாயக முறையில் நடந்துகொள்ளவோ சுலபமாக முன் வரவில்லை. ஆனுல் அமெரிக்காவில் வர்க்கங்களும் தனிப்பட்ட மனிதர்களுடைய அந்தஸ்தும் வெகு வேகமாக உயர்ந்தது.

அமெரிக்காவில் வர்க்க உறவுகள் இப்படி வேகமாக மாறிவந்த படியால், ஒன்ருக உட்கார்ந்து சாப்பிடுவதிலிருந்து விவாக சம்பந்தங்கள் வரை எல்லாவற்றிலும் அவ்வப்போது மாறுதல்கள் ஏற்பட்டன. எனவே வர்க்கங்களே அங்கு இல்லையென்று சிலர் கருதுவதில் ஆச்சரியமில்லை. ஜாதிகள் அங்கே இல்லை என்று கூறினுல் அதற்கு ஓரளவு அர்த்தம் உண்டு. 'பாஸ்டன் பிராமணர்'களையும், நீக்ரோ—வெள்ளையர் பாகுபாட்டையும் மறந்து விட்டால் அமெரிக்காவில் ஜாதி வித்தியாசம் அதிகம் இல்லை. ஆனுல் வர்க்க வேறுபாடுகள் இருக்கின்றன. வருமானம், அதிகாரம், அந்தஸ்து முதலியவற்றின் அடிப்படையில் வர்க்கங்கள் பிரிந்து நிற்கின்றன. தங்களுடைய அந்தஸ்தையும், வருமானத்தையும் உயர்த்திக்கொள்ள அவை போராடி வருகின்றன. சமூக ஏற்றத் தாழ்வுகளை அகற்றுவதற்கான இயக்கம் இப்படி ஒரு சமூகத்திலுள்

ளேயே இருக்கும்வரை, வர்க்கப் பிரிவினைகளும் அவற்றைத் தொடர்ந்து வர்க்கப் போராட்டமும் இருந்தே தீரும். வர்க்கப் போராட்டத்தின் விளைவாக தொழிலாளருடைய அந்தஸ்து உயர்ந்திருக்கிறது. வருடாந்திர சம்பள உயர்வு, வேலையில்லாத காலத்தில் கூலி முதலிய சலுகைகளை அவர்கள் பெற்றிருக்கின்றனர். இப்படி அவர்கள் பெற்றிருப்பதன் பெருமை அங்குள்ள தொழிற் சங்க இயக்கத்துக்கு மட்டுமின்றி, அமெரிக்கப் பொருளாதாரத்துக்கும் சேரும். நிலைமைக்குத் தக்கபடி அமெரிக்கப் பொருளாதாரம் விரிந்து கொடுக்கிறது. ஆனால் அப்படி அது எவ்வளவு தூரம் விரியும்? தொழிலபிவிருத்தி ஓரிடத்தில் நின்றுவிடும்; பிறகு வாழ்க்கைத்தரம் உயருவதும் நின்று விடுவதைத் தவிர வேறு வழியில்லை.

அந்த நிலைக்கு வந்த சமூகம் என்ன ஆகும்? மற்ற துறைகளில் அபிவிருத்தி யடைந்த சமூகம் இதைத் தாக்கும். மேலும் இந்த சமுகத்தினுள்ளேயே நடக்கும் வர்க்க இயக்கமும் மிகவும் கடுமையாகி தாங்க முடியாத நிலைமைக்கு வந்து விடுகிறது. பிறகு என்ன நடக்கும்? மற்ற சமுதாயங்களில் நடந்ததைப் போல் அமெரிக்கர்களும் ஏதோ ஒருவிதமாக ஜாதிகளை ஏற்படுத்த வேண்டும். இன்றேல் சமுதாய சீர்குலைவு அவர்களுக்கும் உண்டாகும். ஜாதிகளை சிருஷ்டிப்பதும்கூட தற்காலிகமாக உதவுமே தவிர பிரச்னையை நிரந்தரமாகத் தீர்க்காது. ஜாதிகளும் ஏதோ ஒருநாள் ஒழிந்தே தீரும்.

ஏற்கனவே தொழிற் சங்கக் கூட்டங்களும் ஜாதிக் கூட்டங்களைப்போல ஆகிவிட்டன. குறிப்பிட்ட ஒரு தொழிலைச் சேர்ந்த தொழிலாளர் அங்கங்கே ஒன்று திரளுகின்றனரே தவிர, உழைப்பாளர் எல்லோருமே சேர்ந்து ஒரு வர்க்கமாக மாறவில்லை. ஒன்று திரண்டிருக்கும் தொழிலாளரிடம் காணப்படும் ஒற்றுமைகூட இயற்கையாக இல்லை. பாட்டுப் பாடியும், மற்றும் பலவித அசட்டு முறைகளை கையாண்டும் அவர்களைத் திரட்ட வேண்டியிருக்கிறது. ஒற்றுமை அவர்களுடைய முன்னேற்றத்துக்குப் பயன்படும் ஒரு ஆக்கிரமிப்பு ஆயுதமாக இன்று தோற்றமளிக்கிறது. இதையே ஒரு பாதுகாப்புக்

கவசமாக மாற்றுவது கஷ்டமல்ல. முதலாளியும், தொழிலாளரும் ஒத்துப்போகக்கூடிய விஷயங்களை என்னென்னவென்று பேசித் தீர்த்துக்கொள்ள வேண்டு மென்றும், சில விஷயங்கள் அரசியல் மேடைக்கு அப்பாற்பட்டவை என்று நிர்ணயிக்க வேண்டு மென்றும், உழைப்பாளிகள் சமூகம், கூட்டுறவு சமுதாயம். உழைப்பாளர் அந்தஸ்து என்றும் இன்னும் என்னென்னவோ அமெரிக்க சமூக நூல் அறிஞர்கள் எழுத ஆரம்பித் திருக்கிறார்கள்.

ஐரோப்பாவில் இப்படிப்பட்ட தெளிவற்ற ஜாதிப் பிரிவினையை உட்கருத்தாகக் கொண்ட வார்த்தைக் கோவைகள் பல வருடங்களாகவே உலவி வருவது அனைவரும் அறிந்ததே. இவையெல்லாம் சந்தர்ப்பத்திற் கேற்ற கோஷங்கள். ஆனால் ஒரு விஷயம் தெரிகிறது. அமெரிக்காவிலுள்ள வர்க்கங்கள் எவ்வளவு தீவிரமாக ஜாதிப் பாகுபாடுகளி லிருந்து ஒதுங்கி நிற்கிறதோ அவ்வளவு தீவிரமாக அமெரிக்காவின் பொருளாதாரமும் நிலைமைக்கு ஏற்றவாறு விரிந்து கொடுக்கிறதென்று தெளிவாகிறது.

ஐரோப்பியரின் அதிகாரம் சமீபகாலம் வரை உலகெங்கும் பரவியிருந்தது. சுமார் 700 வருடங்களுக்குமுன் பிருந்து தழைத்தோங்கி வந்த ஜாதிகள் இப்போது அழிய ஆரம்பித்திருக்கின்றன. ஆண்டை—அடிமை உறவுமாறி சுதந்திர விவசாயியாகவோ, பண்ணைக் கூலியாகவோ இப்போது குடியானவர்கள் வேலை செய்ய ஆரம்பித் திருக்கின்றனர். குறிப்பிட்ட ஒரு தொழிலில் ஈடுபட்டவர்கள் எல்லாம் முன் காலத்தில் ஒன்றுகூடி சங்கங்கள் அமைத்துக் கொண்டிருந்தனர் இவை ஒருவிதத்தில் ஜாதிகள் மாதிரியாகவே திகழ்ந்தன. அவை அனுமதி கொடுத்தால்தான் அத்தொழிலை ஒருவர் கற்றுக் கொள்ளலாம். இல்லாவிட்டால் முடியாது. இந்த நிலை மாறி இப்போது தொழிற்சாலைகள் ஏற்பட்டிருக்கின்றன. அவற்றில் தொழிலாளர் வேலை செய்கின்றனர். வர்க்க ரீதியில் அவர்கள் தங்களை உயர்த்திக் கொள்ளவோ தாழ்த்திக் கொள்ளவோ முடியும்.

சாதாரணப் பொது மக்கள்கூட இலவசப் படிப்பு, உபகாரச் சம்பளம் முதலியவை கிடைப்பதால் திறமை மிக்க தொழில் கல்வி கற்று உயர்ந்த உத்தியோகங்களுக்கு வருகின்றனர். ஜனநாயக வளர்ச்சி காரணமாக அரசியல் அதிகாரம் இதுவரை இருந்தவர்களிடமிருந்து மாறி பொதுமக்களைக் கொண்ட கட்சிகள், தொழிற் சங்கங்கள் முதலிய ஸ்தாபனங்களிடம் ஓரளவு வந்திருக்கிறது. அறிவு வளர்ச்சியும் இவ்வாறே. இயற்கையை அணு அணுவாகப் பிளந்து இதுவரை புரியாத பல விஷயங்களை விஞ்ஞானம் நமக்கு விளக்கிக் காட்டியிருக்கிறது. அத்துடன் இதுவரை வளங்கியதாக நினைத்த விஷயங்களில் கூட விளங்காத பல விஷயங்கள் இன்னும் இருக்கின்றன என்ற புதிய அறிவையும் கூட விஞ்ஞானம் நமக்கு அளித்தது. பகுத்தறிவுதான் உண்மையை உணருவதற்கு சரியான வழி என்ற முடிவு இப்போது பரவியிருக்கிறது. இவ்வழியைப் பின்பற்றிய காரணத்தினால் இதற்கு முன்னெப்போதும் ஏற்பட்டிராத கௌரவம் ஐரோப்பியருக்கு உண்டாகி யிருக்கிறது.

ஆனால் அவர்களுடைய அரசியல் ஆதிக்கத்தின் அஸ்தமனம் ஆரம்பமாகிவிட்டது. தொழில் நுணுக்க அறிவு ஓரிடத்தில் வந்து நின்றுவிட்டது. யுத்த ஆயத்தங்களுக்கே பொழுது சரியாக இருக்கிறதே தவிர வாழ்க்கைத்தரம் உயருவதற்கு ஒன்றும் செய்ய முடியவில்லை. பல்வேறு வர்க்கங்களுக் கிடையில் நடக்கும் உபயோகமற்ற போராட்டம் இப்போது பொறுக்க முடியாத நிலைமை அடைந்து வருகிறது. இதுவரை சமத்துவம் கோரியவர்கள் கூட இன்றுள்ள நிலையைப் பார்த்து, சமத்துவத்திற்காகப் போராட ஆரம்பித்தால் சமூக சீர்குலைவு ஏற்படலாமெனப் பயந்து, இப்போதுள்ள முறையே நீடித்தால் போதுமென்று நினைக்கத் தொடங்கி விட்டனர் இன்று ஐரோப்பாவில் பெரும் பகுதியினரின் கோரிக்கை இது தான். தங்களுடைய தற்போதைய அந்தஸ்து, வருமானம் ஆகியவைகளுக்கு ஆபத்து வராமல் பாதுகாக்கக் கூடிய ஒரு சமூகம் அவர்களுக்கு வேண்டும். அப்படிப்பட்ட பாதுகாப்பளிக்கக் கூடியது, மதமோ பகுத்தறிவு இயக்

கமோ—எதுவாக இருந்தபோதிலும் அதை அவர்கள் ஆதரிக்கத் தயாராக இருக்கிறார்கள்.

உண்மையில் அப்படிப்பட்ட இரண்டு இயக்கங்கள் ஐரோப்பாவில் உருவாயின. அவற்றில் ஒன்று ஹிட்லர் இயக்கம். இரண்டாவது ரஷ்யாவில் ஆரம்பித்த கம்யூனிஸ்ட் இயக்கம். இவை இரண்டும் சாதாரணமாக ஒன்றுக்கொன்று முரண்பட்டதாகக் கூறுவதுண்டு. பலவிதங்களில் அவை முரண்பட்டவைதான். ஆனால் ஜாதி, வர்க்க மாறுதல்களை சமாளிக்க அவ்விரண்டு நாடுகளும் எடுத்துக்கொண்ட நடவடிக்கைகளே மேற்படி இயக்கங்கள் என்பது என் கருத்து. ஹிட்லர் அதிகாரத்துக்கு வருமுன் ஜெர்மனியில் வர்க்கப் போராட்டம் தாங்கமுடியாததாகிவிட்டது. வேலை நிறுத்தங்கள் பெருகின. ராணுவத்தினர், தொழிலதிபர், மாணவர், தொழிலாளர், விவசாயிகள், டாக்டர்கள், வக்கீல்கள் போன்றவர்களுக்கிடையில் உறவு பெருத்த நெருக்கடிக்கு உள்ளாயிற்று. சர்க்காரை நடத்த முடியவில்லை. பொருளாதார நிலை படுமோசமாயிற்று. அந்த சமயத்தில் நாஜி கட்சி ஒரு திட்டம் கொடுத்தது. எல்லா வர்க்கங்களும் தங்கள் தங்களுடைய இடங்களில் அப்படியே இருந்து நிர்ணயம் பெறக்கூடிய புதிய ஜாதித் திட்டம் அது. அக்காலத்திலிருந்த ஜெர்மன் மக்கள் அது மிகவும் புத்திசாலித்தனமான ஒன்று என்று நினைத்தனர். முன்னுக்குவர முயற்சித்துக் கொண்டிருந்த வர்க்கங்கள் தங்களுடைய போராட்டத்தை நிறுத்தி நாஜி திட்டத்தை ஏற்றுக் கொண்டனர். நாஜிகள் கூறியது என்ன?

ஜெர்மனியில் பல்வேறு வர்க்கங்களுக் கிடையில் போராட்டம் தாங்கமுடியாமல்போய் சமூகமே சீர்குலைந்து விடுமோ என்ற பயம் எல்லோருக்கும் வந்தவுடன், அந்தந்த வர்க்கங்களுடைய அந்தஸ்துக்கும் வருமானத்துக்கும் பங்கம் வராமல் ஜாதி நிர்ணய முறை ஒன்றை ஏற்படுத்த முன்வந்ததே நாஜித்திட்டம். வாழ்க்கையை அர்த்தமுள்ளதாகவும், அதனுடைய லட்சியம் பூர்த்தியடையும் முறையிலும் அத்திட்டம் நிறைவேற்றி வைக்கப் படுமென்று கூறியவுடன் அதுநீடித்திருக்குமா அதற்கு உயர்ந்த, தெய்

வீக மதிப்பு இருக்கிறதா, மிகவும் குறுகிய தேசியஉணர்ச்சியை அது அடிப்படையாகக் கொண்டிருக்கிறதே—அது நல்லதா என்பதைப் போன்ற பிரச்னைகளை யாரும் கவனிக்கவில்லை.

நாஜி இயக்கம், ஒரு ஜாதி இயக்கம். ஆனால் அது வெற்றிபெறவில்லையே என்றால் அது வேறுவிஷயம். ஜாதி நிர்ணயத்தின் மூலமாக வர்க்கப் போராட்டத்தை தடுக்கும் முறை ஐரோப்பாவில் இனி நடக்காது போலும். வர்க்கப்போராட்டம் அங்கு ஒரு புதுவித நாகரிகத்தினிடையில் வளர்ந்தது. உள்நாட்டில் சமத்துவத்திற்கும், வெளிநாட்டில் ஏகாதிபத்தியத்துக்கும் ஆதரவளிக்கும் விசித்திரமான வர்க்கப் போராட்டம் அது. அந்த சூழ்நிலையில் வளர்ந்ததால் இனி வர்க்கம், ஜாதியாக மாறுவதற்கு இடமுண்டா என்று தெரியவில்லை. அது எப்படியானாலும் ஒரு விஷயம் நிச்சயம். ஜெர்மனியில் வர்க்கங்களை ஜாதிகளாக்கும் முயற்சி நடந்தது. ஆனால் அது தோல்வியுற்றது. இதுவே நாம் முக்கியமாகக் கவனிக்க வேண்டிய விஷயம்.

அதே ஜாதி நிர்ணய முயற்சி தான் ரஷ்யாவிலும் நடக்கிறது. கம்யூனிஸ்ட் தத்துவத்தில் வெளிப்படையான நம்பிக்கைமட்டும் கொண்டவர்கள் இதை ஒப்புக்கொள்ளமாட்டார்கள். வர்க்கங்களை ஒழிப்பதற்கு முற்படும் முயற்சியல்லவா கம்யூனிஸம் என்று அவர்கள் கேட்பார்கள். ரஷ்யாவிலிருந்து வரும் செய்திகளை எப்படிப் பரிசீலனை செய்கிறோம் என்பதையே பொறுத்தது இது. ஒரு நாஜியை எடுத்துக் கொண்டால் தனது சமூகத்தில் நடப்பதும் கூட ஒரு மாதிரி சோஷலிஸம்தான் என்றும், தங்களுடைய கூட்டு முயற்சியும் கூட வர்க்கங்களை ஒழிக்கும் திட்டம்தான் என்றும் கூறியிருப்பான். ஜெர்மனியிலும் கூட தொழில் முதலாளிகளுடைய வருமானம் வரையறுக்கப்படவில்லையா? அவர்களுடைய லாபத்தில் சுமார் 5 அல்லது 6 சதத்துக்குமேல் அவர்கள் உபயோகித்துக் கொள்ள முடியாது. அவர்களுடைய அந்தஸ்தும் அதிகாரங்களும் குறைக்கப்பட்டன. இவற்றை நாஜிகள் சுட்டிக்காட்டலாம். தங்களுடைய முறைதான் உயர்ந்த

தென்று ஒவ்வொருவரும் கூறுவது இயற்கை. அதை நம்பு வது சரி என்றால் ரஷியக் கம்யூனிஸம் வர்க்கங்களை ஒழிக் கப் பிறந்தது என்று நம்புவதிலும் தவறு இல்லை. ஆனால் மனித சரித்திரத்தை நன்றாகப் பரிசீலனை செய்தவர்களுக்கு அதை நம்புவது கஷ்டமாகவே இருக்கும்.

வர்க்கப் போராட்டம் தாங்கமுடியாத அளவுக்கு வந்தவுடன் ஜாதி நிர்ணய வழியைக் காட்டி அதை அடக்கிவிடுவது ஒவ்வொரு சமுதாயத்திலும் நடந்திருக் கிறது. எந்த வர்க்கம் எந்த ஜாதி ஆயிற்று என்று கேட் டால் அதில் பலவிதங்கள் இருக்கின்றன. வருமானம் அதிகமில்லாத வர்க்கத்தை மிக உயர்ந்த ஜாதியென்று இந்தியாவில் பண்டைகாலத்தில் நிர்ணயிக்கப்பட்டது. மற்ற நாடுகளிலும் இதைப் போன்ற உதாரணங்கள் இருக்கின்றன.

ஒருவருடைய அந்தஸ்து அவருடைய வருமானத்தை மட்டும் பொறுத்ததல்ல. தேவைக்கேற்ற ஊதியமும், சக்திக்கேற்ற உழைப்புமே தங்கள் லட்சியமென்று கம்யூ னிஸ்டுகள் கூறுகிறார்களே இதைப் போன்ற சுலோகங் கள் இந்தியாவிலிருந்த புராதன ரிஷி வாக்கியங்களில் கூட காணப்படுகிறது. பார்க்கப்போனால் மார்க்ஸை 'நவீன ரிஷி' எனக் கூறுவதிலும் தவறில்லை. இந்தியாவில் மேற் கண்ட சுலோகம் அமுல் நடத்தப்பட்டதா இல்லையா என்பது எனக்குத் தெரியாது. கம்யூனிஸ்டுகள் அதை அமுலுக்கு கொண்டுவர முயற்சிக்கின்றனர்.

தற்காலிகமாக தங்களுடைய கோஷம் 'உழைப்புக் கேற்ற ஊதியம்' என்று இருந்தாலும் முதலில் கூறியதே தங்களுடைய லட்சிய மென்று அவர்கள் கூறுகின்றனர். அது எப்படியோ போகட்டும் ஒன்று மட்டும் நிச்சய மாகத் தெரிகிறது. ரஷ்யாவில் பல்வேறு தொழிலாளர் கோஷ்டிகளுடைய அந்தஸ்தும் நிர்ணயிக்கப்பட்டுவிட் டது. இவற்றை மாற்ற அவர்கள் முயற்சிக்க முடியாது. தலைமைப் பீடத்திலுள்ளவர்கள் வேண்டுமானால் மாற்ற லாம். மேலும் நாட்டின் மொத்த வருமானம் அதிகரித்து தொழிலாளர் கோஷ்டிகளுடைய வித்தியாசங்கள் தானாக

குறைந்தாலொழிய குறிப்பிட்ட காலத்துக்குப் பிறகு எவ்வித மாறுதலும் யாராலும் செய்ய முடியாது.

கம்யூனிஸம் வர்க்கப் போராட்டத்தை ஒழித்துவிடக் கூடியதா யிருக்கலாம். ஆனால் அது வர்க்கங்களை ஒழிப்பதன் மூலமாக அல்ல. அந்தஸ்தும், வருமானமும் நிர்ணயிக்கப்பட்ட புதிய ஜாதிகளை உண்டாக்குவதன் மூலமாக வர்க்கப் போராட்டம் அங்கு மறைந்து போகக்கூடும். சமீபகால ஐரோப்பிய சரித்திரத்தில் தோன்றிய நாஜி, கம்யூனிஸ்ட் இயக்கங்களுடைய உண்மை உருவம் என்ன? உள்நாட்டு வர்க்கப் போராட்டத்தினால் கலங்கித் துடித்து நின்ற ஐரோப்பிய உள்ளம் அதை முடிப்பதற்கு ஜாதி முறையைக் கையாண்டிருக்கிறது. இதுபற்றி ஆச்சரியப்படுவதற்கில்லை. வர்க்கங்களை ஒழிக்க முற்படுபவர்கள், அதிலிருந்து ஒரு பாடம் கற்றுக்கொள்ள வேண்டும். அவர்களுடைய நோக்கம் நல்லதுதான். ஆனால் வர்க்கங்களை ஒழிக்கப் போய் புதிய ஜாதிகளைச் சிருஷ்டித்துவிடக் கூடாது.

ரஷ்யாவும் ஜெர்மனியும் ஜாதிகளை ஏற்படுத்த முயற்சித்த போதிலும், அவைகளுக்கிடையில் ஒரு வித்தியாசம் இருக்கிறது. ஜெர்மனியில் மிகப் பெரிய பொருளாதார முன்னேற்றம் ஏற்பட்டிருந்தது. வர்க்கப் போராட்ட நெருக்கடி முற்றியதால் முன் கூறிய பொருளாதாரம் சீர்குலைந்து விடுமென்ற பயம் அங்கே ஏற்பட்டது. எனவே அதைக் காப்பாற்றுவதற்காக ஜெர்மனியில் ஜாதி நிர்ணயம் ஆரம்பமாயிற்று. ஜெர்மன் பொருளாதாரத்துக்கு வெளிநாட்டு பலம் தேவையாயிருந்தது அல்லவா? அதற்கு ஜாதி நிர்ணயமே போதிய பதிலாக

ரஷ்யாவின் நிலைமை வேறு. அது விவசாய நாடு. பெரும் தொழிலபிவிருத்தி பெற விரும்பியது. வர்க்கப் போராட்டம் தீவிரமாக நடந்து கொண்டிருந்தால் தொழில் வளர்ச்சி ஏற்படாது. அதை உத்தேசித்து ரஷ்யா ஜாதி நிர்ணயத்தை மேற்கொண்டிருக்கலா மென்று தோன்றுகிறது. ரஷ்யாவின் நிலப்பரப்பு அதிகம். ஜனத்தொகையோ குறைவு. செல்வப் பெருக்கத்துக்கு மிகவும்

நல்ல வாய்ப்பு இருந்தது. எனவே இருக்கும் செல்வத்தைப் பாதுகாக்க ஜெர்மனியிலும், இல்லாத செல்வத்தை உற்பத்தி செய்துகொள்ள ரஷ்யாவிலும் ஜாதிகள் உண்டாக்கப்பட்டன.

வெளியாரின் தலையீடின்றி ரஷ்யா, தனது பொருளாதார முன்னேற்றத்துக்கு வழி தேடிக்கொள்கிறதென்று வைத்துக் கொண்டாலும் அங்கு இப்போதுள்ள ஜாதிகளே மீண்டும் வர்க்கங்களாக மாறுமா என்று யாரும் திட்டமாக சொல்ல முடியாது. மற்றொரு குறைபாடும் ரஷ்யாவில் இருக்கிறது. ஜாதி முறையின் படுமோசமான அம்சங்களுடன் ஒருவகையான தீண்டாமையும்கூட அங்கு காணப்படுகிறது. மொத்த ஜனத்தொகையில் சுமார் 20 சதவிகிதம் இந்தியாவில் தீண்டப்படாதவர்கள் இருக்கிறார்கள். ரஷ்யாவிலுள்ள காவல் முகாம்களில் அந்நாட்டு ஜனத்தொகையில் 5 முதல் 10 சதவிகிதம் வரையில் இருக்கின்றனர். இது எப்படி ஏற்பட்டது என்பது ஒருபுறமிருக்கட்டும். மனித உழைப்பை ஈவிரக்கமின்றி, மிகக் குறைந்த கூலி கொடுத்து பொருளாதார முன்னேற்றத்துக்கு பயன்படுத்திக் கொள்கின்றனர் ரஷ்யாவில். ஆனால் இந்தியாவிலிருப்பதைவிட ரஷ்யாவிலிருக்கும் தீண்டாமை கொடியதென்று நினைத்து விடக்கூடாது. காலமும் மதமும் சேர்ந்து இந்தியாவில் தீண்டாமைக்கு ஒரு உருவம் கொடுத்து விட்டது. அக்கொடுமைக்கு உள்ளானவர்கூட இப்போது அதைப் பொருட்படுத்துவதில்லை.

வர்க்கமானது ஜாதியாக உருவெடுப்பது இந்தியருக்கு வெகு நன்றாகத் தெரியும். பல நூற்றாண்டுகளாக அது இங்கு நடந்து வந்திருக்கிறது. இப்போது ஐரோப்பாவில் நடக்கிறது. ஐரோப்பிய ஜாதி முறை இங்கிருப்பது போலவே இருக்குமா அல்லது வேறு உருவம் எடுக்குமா என்பது வேறு பிரச்னை. அவர்களுடைய முயற்சியே தோல்வியுறலாம். யந்திரப் புரட்சியை அடிப்படையாகக் கொண்டது ஐரோப்பிய நாகரிகம். அதனால் நிரந்தரமான வாழ்க்கை அமைப்பில் மக்களை வைத்து ஜாதிகளை நிறுவுவது மிகக்கடினம். இருந்தபோதிலும் தொழிலபிவிருத்தி குறைந்து வேலை நன்றாக நடக்காத காரணத்தினால் ஒரு

வித ஜாதியை உண்டாக்கவே ஐரோப்பியர் முயற்சிப்பார்கள். ஆனால் சமத்துவப் போராட்டத்தில் ஊறிவந்த பண்பு அவர்களுக்கு இருப்பதால் முற்கூறிய ஜாதி முயற்சி சுலபத்தில் வெற்றிபெறாது. மக்களுடைய போராட்டம் தீவிரமாகவே வழியுண்டாகிறது. அந்த நிலை ஏற்படுமானால் ஐரோப்பிய நாகரிகம் நசித்து அதை விட சக்திவாய்ந்த மற்றொன்று அதனுடைய இடத்துக்கு வரும்.

ஒரு சமுதாயத்தில், வர்க்கப் போராட்டம் சகிக்க முடியாத அளவுக்குப் போகுமானால், ஜாதிகளை ஏற்படுத்தும் முயற்சி தலையெடுக்கிறது. அப்படிப் பட்ட சமயங்களில் வர்க்கங்களை ஒழித்து விட்டோமென்று நாம் சந்தோஷப்படுவதற்கில்லை. வர்க்கங்களை ஒழித்துவிட்ட அதே இடத்தில் ஜாதிகள் முளைக்குமானால் என்ன பிரயோஜனம்? வர்க்கங்களை ஒழிக்க வேண்டுமென்ற விஷயத்தில் என்னுடைய ஆர்வம் மற்றவர்களுடையதற்குக் குறைந்ததல்ல. வர்க்க ஒழிப்புப் போர்வையில் ஜாதிகள் சிருஷ்டிக்கப் படுவதைப்பற்றியே நான் பயப்படுகிறேன். சமுதாயத்தினுள் ஜாதிகள் வர்க்கங்களாகவும், வர்க்கங்கள் ஜாதிகளாகவும் மாறியிருக்கின்றன வென்று சரித்திரம் நமக்கு எடுத்துரைக்கிறது.

அந்த இரண்டையும் ஒழிக்க விரும்புகிறவர்கள் அவை எப்படி உண்டாயின என்று ஊன்றிக் கவனிக்க வேண்டும். பிறகு தக்க முறைகளை உருவாக்கவேண்டும். சரித்திரத்தினால் அதற்கு தானாகவே வழி பிறக்குமென்று நம்பக் கூடாது. அப்படித் தானாகவே தீரும்பிரச்னை இதுவல்ல. ஜாதிகளின் விளைவாக முன்னேற்றம் தடைப்பட்டு இந்திய நாடு இவ்வளவு காலம் உறங்கிக் கிடந்தது. இப்போது ஏற்பட்டிருக்கும் புத்துணர்ச்சி காரணமாக ஜாதிகள் வகுப்புகளாக மாறவும், சமுதாயத்திலுள்ள உயர்வு தாழ்வுகளை அகற்றுவதற்குப் போராட்டங்களும் ஆரம்பமாகி யிருக்கின்றன. முதலாளித்துவம், கம்யூனிஸம் போன்ற ஐரோபபியக் கொள்கைகள் எப்படி உண்டாயின, எப்படி வளர்ந்தன என்றெல்லாம் சிந்திக்காமல் அப்படியே அவற்றை நாம் எடுத்துக் கொண்டால்

இந்தியாவில் இப்போது ஏற்பட்டிருக்கும் புத்துணர்ச்சி அடியோடு அழிந்து விடக்கூடும். பிறகு ஒரு புதிய ஜாதி முறை பிறக்கும். அரசியல் கட்சியும், மேற்பார்வை வர்க்கமும், வக்கீல், டாக்டர் போன்ற தொழில் வர்க்கங்களும் அதில் உயர்ந்த ஸ்தானங்களையும் மற்ற சாதாரண மக்கள் தாழ்ந்த இடங்களையும் பெறும் நிலை உண்டாகும். எனவே இவ்விஷயத்தில் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்.

# உயர்வும் தாழ்வும்

வருணம், வர்க்கம் ஆகியவைகள் உள்நாட்டில் மாறி மாறித் தோன்றுவதற்கேற்ப வெளிநாட்டிலும்—ஒரு சமுதாயம் அல்லது நாகரிகத்துக்கு வெளியிலும் அது மாறுதல்களை ஏற்படுத்துகிறது. வர்க்கங்களுக்கிடையே நடைபெறும் போராட்டம் ஒருபுறம் இருக்க, மறுபுறம் அதே சமயத்தில் பல்வேறு நாடுகளிடையிலும் போராட்டம் நடைபெறுகிறது. சுபிட்சமும், அதிகார பலமும் ஒவ்வொரு கால கட்டத்திலும் இடம்மாறி வந்திருக்கின்றன. சரித்திரத்தில் உன்னத நிலையில் ஒரு நாட்டு மக்கள் எப்போதுமே நிரந்தரமாக இருந்ததில்லை. இந்திய மக்கள் கூட அத்தகைய உன்னத நிலையில் ஒரு காலத்தில் இருந்திருக்கிறார்கள். சென்ற இருநூறு ஆண்டுகளாக அவர்கள் தாழ்வுற்று மண்ணில் கிடந்துழலுகிறார்கள்.

ஐரோப்பிய மக்கள் முந்நூறு வருஷகாலமாக உன்னத நிலையில் இருந்து வருகின்றனர். அதிகார பலமும், சுபிட்சமும் ஒவ்வொரு பிரதேசமாக மாறி வந்திருக்கிறது. வெளிப்படையாகப் பார்த்தால் மனிதகுல சரித்திரம், அதிகார பலமும், சுபிட்சமும் ஒரு கண்டத்திலிருந்து இன்னொரு கண்டத்துக்கு மாறும் சரித்திரமாகவே இருந்து வந்திருக்கிறது. இன்று ஐரோப்பா இருக்கும் உன்னத நிலையில் இந்தியா இதற்கு முன்னால் இருமுறை இருந்திருக்கிறது. கிரீஸ், ரோம், சீனா, அரேபியா, ஆகிய நாடுகளும் ஓரளவுக்கு மெக்ஸிகோவும் அத்தகைய உன்னத நிலையில் இருந்திருக்கின்றன. உயர்வும் தாழ்வும் ஒவ்வொரு நாகரிகத்தினுடையவும் இயல்பான தன்மை. இதுவரை இந் நியதி மாறவில்லை.

உள்நாட்டில் வருணம், வர்க்கம் ஆகியவைகளிடையே ஊஞ்சலாட்டம், வெளியே அதிகார பலமும் சுபிட்சமும் தங்கள் பிரதேசத்தை மாற்றிக்கொள்வது—இவைதான் மனிதகுல சரித்திரமாக இருந்து வந்திருக்கின்

றது. இவை இரண்டும் ஒன்ருேடொன்று சம்பந்தப்பட்டவையாகும். குறிப்பிட்ட ஒரு பிரிவினர், அதிகார பலமும் சுபிட்சமும் பெற்று விளங்கும்போது வருண அமைப்புமுறை தளர்கிறது. சமத்துவத்துக்காக உள்நாட்டில், வர்க்கங்களுக்கிடையில் சமாளிக்கக்கூடிய அளவில் போராட்டம் நிகழ்கிறது.

நியாயமான வருண அமைப்பு ஏற்படுகிறதோ இல்லையோ, தேக்கநிலை ஏற்பட்டு ஓரிரு முயற்சிக்குப்பின் அந்த சமுதாயம் அழிக்கப்படும் என்பது நிச்சயம். வெளியில் அதிகாரபலமும், சுபிட்சமும் அதிகரிக்கும்போது உள்ளே ஏற்றத் தாழ்வு குறைகிறது; அதேபோல் வெளியே அதிகார பலமும் சுபிட்சமும் குறையும்போது உள்ளே ஏற்றத்தாழ்வு அதிகரிக்கிறது. அப்போது ஒரு வருண அமைப்பு இயங்கத் தொடங்குகிறது.

எந்த ஒரு கட்டத்திலும் ஒரு குறிப்பிட்ட சரித்திர சூழ்நிலையில பங்கு கொள்ளும் பாத்திரங்கள், உள்ளே வருணமும், வர்க்கமும், வெளியே அதிகார பலமும்தான். வெளியிலிருந்து எந்த ஒரு சமுதாயத்தைப் பார்த்தாலும், மற்ற சமுதாயங்களுடனும் நாகரிகங்களுடனும் நிரந்தர உறவு உள்ளது போலவே இருக்கிறது. அந்த உறவு சாதகமானதோ, பாதகமானதோ—அது வேறு விஷயம். உள்ளேயிருந்து பார்த்தால் அது வர்க்கத்துக்கும் வருணத்துக்குமிடையே சுழன்று கொண்டிருக்கிறது. இந்த உள், வெளி அசைவுகளுக்கு இணைப்புச் சங்கிலியாக விளங்குவது அந்த சமுதாயத்தின் ஸ்தாபன, தொழில் நுணுக்கத் திறமைதான். தனியே குறிப்பிட்ட ஒரு துறையில் முன்னேறவே இதுவரை ஒவ்வொரு சமுதாயமும் முயன்றிருக்கிறது. இதைப் பொறுத்தே அதனுடைய உள்வெளி அசைவுகளுடைய தன்மை இருக்கும். ஒரு நாகரிகம் திறமையின் உச்சகட்டத்தை நோக்கிப் போய்க்கொண்டிருக்கும்போது வெளியே அதனுடைய அதிகார பலம் அதிகரிக்கிறது. இது வெளிநாட்டினரைப் படையெடுத்து வராமற் செய்யவும், அப்படி வந்தால் அவர்களை எதிர்த்து முறியடிக்கவும் கூடிய பலத்தையளிக்கிறது. திறமையின் உச்ச கட்டத்தையடைந்து கொஞ்ச காலத்துக்குப் பிறகு

ஒரு நாகரிகம் வீழ்ச்சியடையத் தொடங்குகிறது. வேறு நாகரிகங்களுக்கு அது இரையாகிறது. இல்லது இரண்டொரு சமயங்களில் தனித்து நின்று தேக்க நிலையிலேயே இருக்கிறது. எப்படி நேர்ந்தபோதிலும் உள்—வெளி அசைவுகளின் தேவைகளைப் பூர்த்திசெய்ய அதனால் முடிவதில்லை.

திறமையின் உச்ச கட்டத்தை அடைந்த கொஞ்ச காலத்துக்குப்பின் சமுதாயம் கிளர்ந் தெழுகிறது. சமத்துவ ஆர்வம் பெருகுகிறது. இந்த ஆர்வம் ஓரளவுக்குத் திருப்திப்படுத்தப்படுகிறது. ஆனால் எல்லாத் துறையிலும் சமத்துவம் எப்போதுமே ஏற்பட்டதில்லை. வளரும் நாகரிகம் நாடும் குறிப்பிட்ட சில துறைகளில் கூட சமத்துவம் ஏற்பட்டதில்லை. திறமை அதிகரித்துக்கொண்டே போவதும், அத்துடன் அதிகார பலமும், சுபிட்சமும் பெருகுவதும் வாழ்க்கைத்தர உயர்வு கோரும் உள்நாட்டினர் அபிலாஷையை பூர்த்தி செய்யக் கூடிய சூழ்நிலையை உருவாக்குகிறது வருமான ஏற்றத் தாழ்வு அகற்றப்படாவிட்டாலும் கூடப் பொதுவாக எல்லா வருமானங்களும் அதிகரிக்கப்படுகின்றன. இது சமத்துவம் ஏற்பட்டுவிட்டது போன்ற ஒரு தோற்றத்தை அளிக்கிறது. ஆனால் உணவு உடை போன்ற வாழ்க்கையின் அத்தியாவசியத் தேவைகளைப் பொறுத்தவரை இந்த அதிகரிப்பினால் உண்மையான பலனே ஏற்பட்டிருக்கிறது.

திறமை குறையத் தொடங்குவது, அல்லது நெருக்கடி வெடிப்பதின் காரணமாகக் கூலியை அதிகரிப்பதோ, ஏற்றத் தாழ்வைப் போக்குவதோ முடியாமற் போகும் போது வர்க்கப் போராட்டம் சீர்குலையத் தொடங்குகிறது. இக்கட்டத்தில் சுமுகமான நிலையேற்படுத்த முயற்சி செய்யப்படுகிறது அப்போது 'நீதி'யே உன்னத லட்சியமாகிவிடுகிறது. நீதியை வற்புறுத்தாமல், ஒழுங்கான வாழ்க்கை முறை அசாத்தியமாகிவிடுகிறது; பாது காப்பாற்ற நிலைமை நிலவுகிறது.

இந்த நீதி உணர்ச்சி புத்திசாலித்தனமான ஒரு வருண அமைப்பை ஏற்படுத்த முடிந்தால் அந்த நாகரிகம்

இன்னும் கொஞ்சகாலம் நீடிக்கலாம். ஆனால் அந்த நாகரிகம் தேக்க நிலையை யடைவதோ, அழிந்துபோவதோ தவிர்க்க முடியாதது. புதிய துறையில் திறமை பெற முனைந்து அதனுடைய சிருஷ்டி சக்தி விழிப்படைந்து விட்டால் இதைத் தவிர்க்க முடியும்.

சமத்துவத்தை வற்புறுத்தும் ஆர்வத்துக்கு சின்னமாக விளங்குவது வர்க்கம். அதேபோல் நீதியை வற்புறுத்தும் ஆர்வத்தின் சின்னமே வருணம். சமத்துவ ஆர்வம் இயற்கையானதும் தீவிரமானதுமாகும். ஆனால் நீதி ஆர்வம் தூண்டிவிடப்பட்ட ஒன்றேயாகும். எழுச்சியும், வீழ்ச்சியும் அடையும் ஒரு சமுதாயத்தில் இவை புலப்படுத்தப்படுகின்றன. இந்த சூழ்நிலையில் சமத்துவம் சீர்குலைவாக மாறுகிறது. நீதி தேக்க நிலையாக மாறுகிறது. ஒரு நாகரிகத்தில் சக்கரச் சுழற்சிபோல் இவை நிகழுகின்றன. சமத்துவம்—வர்க்கம்—சீர்குலைவு, நீதி—வருணம்—தேக்க நிலை. இது சக்கரம்போல் சுழன்று நிகழுகிறது. மனிதனுடைய விதி, சமத்துவம்—நீதி, ஜீவ சக்தி—நிலையான தன்மை ஆகியவற்றுக்கிடையே ஊசலாடிக்கொண்டிருக்கிறது. இவை வளரும் அல்லது வீழ்ச்சியுறும் ஒரு நாகரிகத்தில் நிகழ்கின்றன என்பதை திரும்பச் சொல்லவேண்டிய அவசியமில்லை. இரண்டுக்குமிடையே நிரந்தர மோதல் இருந்துகொண்டேதானிருக்கிறது.

ஒரு நாகரிகத்தின் வளர்ச்சியையும், வீழ்ச்சியையும் காணும் வாய்ப்பு மனித வர்க்கத்துக்குக் கிடைத்திருக்கிறதா? நாகரிகம் என்ற மரத்தின், வர்க்கம் என்ற ஒரு கிளையிலிருந்து வருணம் என்ற மற்றொரு கிளைக்குத் தாவும் குரங்கின் நிலையிலே அவன் எப்போதாவது இருந்திருக்கிறானா? பல்வேறு சரித்திர ஆராய்ச்சியாளரும் இந் நிகழ்ச்சிகள் மாறி மாறி வருவதைப் பற்றி பல கருத்துக்களை வெளியிட்டிருக்கின்றனர். ஆனால் சுழன்று சுழன்று இவை நிகழ்கின்றன என்பது மறுக்க முடியாதது. பல்வேறு கட்டங்களில் இவை நேருகின்றன. ஆனால் அந்த கட்டங்கள் சிருஷ்டித்தன்மை வாய்ந்ததா அல்லது முற்போக்கானதா என்று விளக்கிச் சொல்ல ஆதாரங்கள்

ஏதுவும் இல்லை. புராதன இந்தியா, ரோம் ஆகியவற்றின் வர்க்கங்களும் நவீன ஐரோப்பாவின் வர்க்கங்களும் வெவ்வேறானவை. உலகிலுள்ள இதர மனிதர்களிலிருந்து மாறுபட்டவை. அதேபோல் இந்தியா அல்லது சீனுவி னுடைய வருணங்களும் ரஷ்யா அல்லது ஜெர்மனியில் ஏற்படுத்த முயன்ற வருணங்களும் அக்காலத்திய உலகின் இதர மனிதர்களிலிருந்து வேருனவை. ஆனால் சிருஷ்டி சக்தியில் ஒன்ருெடொன்று மாருனவை யல்ல. இந்த சுழற்சியை சமுதாயம், நிலப்பிரபுத்வ அமைப்பிலிருந்து சோஷலிஸ்ட் நாகரிகத்தை நோக்கி முன்னேறுவதாக வர்ணிப்பது,: நவீன கால தொழில் நுணுக்க அபிவிருத்தி யின் மூலம் வறுமையற்ற உலகை ஏற்படுத்த முடியும் என்று எண்ணுவதைப் போன்று அவ்வளவு பைத்தியக் காரத்தனமாகும்.

நாகரிகங்களின் தன்மையில் இவ்வளவு வேறுபாடுகள் இருந்தபோதிலும் உடலில் வறுமையும் உள்ளத்தில் துயரமும் முன்னெப்போதும் இருந்ததைவிட அதிக மாகவே இன்று இருந்து வருகிறது. உலக ஜனத்தொகை யில் மூன்றில் இரு பகுதியினர் மோசமான வாழ்க்கை நடத்துகின்றனர். ஜனத்தொகை அதிகரிப்பின் விளை வாக இது ஏற்பட்டதா அல்லது நிலங்களின் அளவு குறைந்ததால் நேர்ந்ததா என்பதெல்லாம் வேறு விஷயம். முதலாளித்வ நாகரிகத்தில் கீழ்த்தளத்தில் வாழ்க்கை நடத்தும் இவர்களிடம் சென்று பிற்பட்ட நிலையிலிருந்து அவர்கள் முன்னேறி வந்திருப்பதாகக் கூறினுல் சிரிக்கவே செய்வார்கள்.

குறிப்பிட்ட துறையில் அடைந்த முன்னேற்றத்தை பரிபூரண முன்னேற்றமென்றும், உலகில் ஒரு பகுதியில் நிலவும் நிலைமையை உலகம் பூராவுக்குமான நிலைமையாக வும் எண்ணி குழப்பிக் கொள்வதன் காரணமாக சரித் திரத்தை உருவாக்குவதிலும் அதைப் புரிந்து கொள்வதி லும் பெரும் தவறு ஏற்பட்டிருக்கிறது. பாலை வனங்களை சோலை வனங்களாகக் கற்பனை செய்து கொண்டு விடுவ தால் மட்டும் காரியம் முடிந்து விடுமா? நாகரிக சுழற்சியை

நன்கு புரிந்து கொண்டு விட்டால் வர்க்கங்களையும் வருணங்களையும் ஒழிக்க வழி காண்பது சுலபமாகும்.

மேற்கத்திய நாகரிகம் நெருக்கடியை நெருங்கிக் கொண்டிருக்கிறது. அதிகார பலமும்—சுபிட்சமும் அதனிடமிருந்து கைமாறிவிட்டது. எனவே உலகில் உன்னத ஸ்தானத்தில் இப்போது அது இல்லை. அமெரிக்கா அந்த நிலையை அடைந்துள்ளது. ரஷ்யாவும் போட்டியாகக் கிளம்பியுள்ளது. அதிகார பலம் குறைந்து வருவதால் ஐரோப்பாவில் ஒரு புது வித வருண அமைப்பை ஏற்படுத்த நடக்கும் முயற்சி தெளிவாகப் புலனாகிறது. எனவே ஒரே உலகமோ, வர்க்கமற்ற சமுதாயமோ ஏற்பட முடியுமென்ற நம்பிக்கை மனித வர்க்கத்துக்கு அற்று விட்டது. வறுமையும் யுத்தமும் அற்ற—மனிதன் தன் வாழ்க்கையின் அர்த்தத்தைப் புரிந்துகொண்ட—உள்நாட்டில் திருப்தியும், வெளி உலகில் அமைதியும் நிலவும் ஒரு பொற்காலம் உதயமாகுமென்ற நம்பிக்கை வெறுங் கனவாகவே தோன்றுகிறது.

மனிதகுல வளர்ச்சியில் வேறொரு சக்தி இல்லாமலிருந்ததால், இந்த வியாக்யானத்தின் விளைவாக ஒரு சோக சித்திரமே புலப்பட்டிருக்கும். வாழ்க்கையின் லட்சியத்தை அறிந்துகொள்ளவே முடியாதோ என்ற விரக்தி தோன்றி யிருக்கும். சரித்திரத்தின் மூலம் மட்டும் தான் அதைத் தெரிந்துகொள்ள முடியுமென்பதல்ல; இன்னும் வேறு எவ்வளவோ வழிகள் உள்ளனவே! எனவே வேறு வழிகளைக் கண்டறிந்து ஆகவேண்டும்.

மக்கள், நாகரிகம் ஆகியவற்றின் எழுச்சியும் வீழ்ச்சியும் எப்போதுமே நிகழ்ந்து வருகிறது. சரித்திர ஆராய்ச்சியாளர்கள் என்ற முறையிலே பிரிட்டிஷ் சாம்ராஜ்ய வளர்ச்சி, பாரோ சாம்ராஜ்யத்தின் வீழ்ச்சி, குப்த சாம்ராஜ்யத்தின் எழுச்சி, ரோம ராமராஜ்யத்தின் வீழ்ச்சி ஆகியவற்றைப் பற்றியும் அவற்றின் காரணங்களைப்பற்றியும் அறிந்திருக்க வேண்டும். கலாசாலையில் கற்றுக் கொடுக்கப்பட்ட காரணங்களை எல்லோருமே மறந்து விடுகிறார்கள். அவை ஏராளமாக உள்ளன. படிக்கும் போது ஒவ்வொன்றிலும் ஏதோ இருப்பதுபோலத்

தோன்றுகிறது. ஆனால் அதுபற்றி சிந்திக்கத் தொடங்கும்போது அர்த்தமற்றதாகத் தோன்றும். ஒரு நாட்டின் வீழ்ச்சிக்கான காரணங்களைக் குறிப்பிடும்போது உள் நாட்டில் பொறாமையும் விரோதமும் நிலவியது பற்றிக் கூறப்படும். ஒவ்வொரு சாம்ராஜ்யம் — நாகரிகத்தின் வீழ்ச்சிக்கான காரணங்களைப்பற்றிய ஒரேவிதமான ஜாபிதாவை என்னால் கொடுக்க முடியும்.

உள்நாட்டில் பொறாமை, வெறி, ஒருவிதமான சோர்வு அல்லது ஆடம்பரம் ஆகியவை, கூறப்படும் காரணங்களில் கட்டாயம் இருக்கும். இவையெல்லாம் எதனால் ஏற்படுகின்றன? பிற்காலத்திய ரோமாபுரிச் சக்கரவர்த்திகள் ஏன் ஆடம்பர வாழ்வை மேற்கொண்டனர்? மற்றவர்களை யெல்லாம் தூக்கியடிக்கக் கூடிய விதத்திலே அயோத்தி நவாப் ஆடம்பர வாழ்வு நடத்தக் காரணம் என்ன ?

ஒரு நாகரிகம் வீழ்ச்சியடைந்து கொண்டிருக்கும் போது வாழ்வதில் அர்த்தமோ நோக்கமோ கிடையாது. வெளி நிர்ப்பந்தம் அதிகரித்துக் கொண்டிருக்கும்போது இருக்கிறவரை அனுபவிப்போமே என்ற எண்ணம் ஏற்படுகிறது. வர்க்கங்களின் ஜீவ சக்தி வீணாகிறது. வருணங்களின் நிலையான தன்மை, சோர்வாக மாறுகிறது. ஒவ்வொரு மனிதனும் கேளிக்கைகளை நாடத் தொடங்கி விடுகிறான். சரித்திரத்தின் பாலைவனப் பகுதிகளை பசும் வயல்களாக்குவதும், எல்லா நாகரிகங்களும் ஒத்து வளர்ச்சியடைவதும் எல்லாத் துறையிலும் முன்னேற்றம் ஏற்பட்டால் தான் சாத்தியமாகும். இதை வெளியிடுவதற்கு மனித வளர்ச்சிக்கான மூன்றாவது சக்தி அவசியமாகும்.

வளர்ந்து வரும் சமுதாயங்களின் போக்கு மனிதவர்க்கத்தை ஒன்றுபடுத்துவதைப் போலத் தோற்றமளிக்கின்றன. ஆனால் அதற்கான திட்டமெதுவும் புத்திசாலித்தனமாக வகுக்கப்படவில்லை. மேலும் இந்த எண்ணம் மனிதவர்க்கம் பூராவுக்கும் பரவக்கூட இல்லை. ஏனெனில் ஒரு நாகரிகம் அல்லது நாட்டு மக்களே அதைப் பற்றிப் பேசுபவர்களாக இருக்கிறார்கள்.

# மனித குலத்தில் சமநிலை

நமது முன்னோர்கள் நீண்ட நெடுந்தூரமுள்ள நாடுகளுக்கெல்லாம் சென்றார்கள். தாங்கள் போய் சேர்ந்த நாட்டையே தாயகமாகக் கொண்டு அங்கு வசித்தார்கள். கட்டுப்பாடுகள், மூடநம்பிக்கைகள் பற்றி அவர்கள் கவலைப்படவே இல்லை. அவர்கள் இப்போது இல்லை. அவர்களுடைய வம்ச வழி வந்தவர்களையும் காணமுடியவில்லை. அவர்கள் மறைந்துவிட்டாலும்கூட அவர்கள் வாழ்ந்த மக்களிடையே ஆயிரக்கணக்கான ரூபத்தில் மீண்டும் தோன்றியுள்ளனர். கிழக்காசியா முழுவதும் வடக்கிலிருந்து தெற்கு வரை இந்திய வாடை வீசும் ஏராளமான வர்களைக் காணலாம். பாங்காக்கிலுள்ள லும்பினி பார்க்கிலோ அல்லது வேறிடத்திலோ ஒரு சிறுவனையாவது சிறுமியையாவது பார்த்தால் 1500 வருடங்களுக்கு முன் அங்கு வாழ்ந்த நமது முன்னோர்களின் வம்சவழி வந்தவர்களைப் போலத் தோற்றமளிக்கிறார்கள். அவர்கள் பேசும் பாஷை பூராவும் நமக்குப் புரியாவிட்டாலும் ஏராளமான இந்திய மொழி வார்த்தைகள் ஒலிப்பதைக் கேட்கலாம். உடனே கடந்தகால நினைவெழுகிறது. அதை மறந்து விடுவது எவ்வளவு கடினமோ அவ்வளவு கடினமானது முழு விவரங்களையும் ஞாபகப்படுத்திப் பார்ப்பதும். இந்தியக் குழந்தைகள் அவர்களுடைய பாட்டிகளிடமிருந்து ஒரு கதையைக் கேட்டிருப்பார்கள். அஸ்ஸாம் மலைப்பகுதிகளிலும், பர்மாவிலும் மிகவும் அழகு வாய்ந்த சில பெண்கள் இருக்கின்றனராம். அவர்கள் மனிதர்களைக் கண்டால், அவர்களை எருமை மாடுகளாக மாற்றிக் கயிற்றால் கட்டி வீட்டுக்கு இழுத்து சென்றுவிடுவார்களாம். இத்தகைய கதைகள் ஏதோ ஒருபழைய குரோதம் காரணமாக எழுந்தவையாகும்.

முன்னோர்கள் குறித்து நான் பெருமையடைகிறேன். ஆனால் மனித வர்க்கத்தை அணுகுவதற்கு அது விரோத

மானதாகும். அது பெருமைப்படக் கூடிய விதத்திலே இருக்கும் மனித வர்க்கத்தினரில் ஒரு பிரிவினரை ஒன்று சேர்க்கவே உதவும். உலகிலுள்ள எல்லா இனமும் ஒரு காலத்தில் பெருமைப் படக்கூடிய விதத்திலே இருந்திருக்கும். பிராகிருதம், பாலி போன்ற கிளைமொழிகளைக் கொண்ட சமஸ்கிருதம் ஒரு காலத்தில் பெருமையுடன் இருந்தது. அது தென்னுசியா பூராவையும் ஐக்கியப் படுத்துகிறது. சற்றுக் குறைந்த அளவில் ஆசியாவின் இதர பகுதிகளையும் ஐக்கியப்படுத்தி யிருக்கிறது என்று கூறலாம். ஜாகர்த்தா, அல்லது பாங்காக்கில் பிரதான் மந்திரி, பஞ்சசீலா, ராத்மனு போன்ற வார்த்தைகள் காதில் விழும்போது நாம் எங்கிருக்கிறோம் என்ற தடுமாற்றம் நேருகிறது. சுரபாயாவில் ஒரு சோஷலிஸ்ட் நண்பர். அவருடைய குடும்பத்துடன் ஒருநாள் உணவருந்தினேன். அவர்களுடைய பெயர்கள் ருக்மாஹி, பத்மாவதி, தர்மவான், யுத்தஙின்ஸா என்றிவ்விதமாக இருந்தன. அவர்கள் முஸ்லிம்கள்! 1932-ல் நடைபெற்ற புரட்சியின் ஞாபகார்த்தமாக தாய்லந்து மக்கள் எழுப்பியுள்ள பிரசித்தி பெற்ற சின்னம் 'ராத்மனு' என்பது. பாங்காங்கின் பிரதான வீதியிலுள்ள கல் ஸ்தம்பம் அது. அதன்மீது கல்லால் ஆன புத்தகம் ஒன்றிருக்கிறது. அதுதான் அவர்களுடைய அரசியலமைப்பு. 'ராஷ்ட்ர மனு' என்பதன் திரிபே 'ராத்மனு'. ராஷ்டிரமனு என்ருல் தேச சட்டத்தை வழங்கியவன் என்று பொருள். தென்னுசிய மொழிகளில் இப்படித் திரிந்து வழங்கும் இந்திய வார்த்தைகள் தான் அதிகம்.

டோக்யோவில் இத்தகைய வார்த்தைகளையோ, முக ஒற்றுமையோ காணமுடியாது. ஆனுல் காமகுராவிலும், நாராவிலும் உள்ள பிரமாண்டமான புத்த சிலைகள் நமக்கு இந்தியாவின் புராதன மகோந்நத நிலையை நினைவூட்டுகின்றன. மனித வர்க்கத்தினிடையே இத்தகைய கலாசார ஒற்றுமை, ஆக்கிரமிப்பு மூலமோ அல்லது வேறுவித உறவுகளின் மூலமோ பரவிப் பெருகி இருக்கிறது—குறிப்பாக அடுத்தடுத்துள்ள இரு நாடுகளிடையே தேச எல்லைகள் இன்றைக்கும்கூட முக்கியத்துவம் வாய்ந்

தவையாகத்தான் உள்ளன. ஏனெனில் அங்குதானே இரு இனங்கள் சந்திக்கின்றன. அன்பு, ஆக்கிரமிப்பு எது வானபோதிலும் அவர்கள் சந்தித்துத்தானே யாக வேண்டும்?

இந்தியாவும், அதனுடைய கலாசாரமும் கிழக்கே ஜப்பான் வரை பரவியதானது இப்பகுதி மக்களிடையே ஒருவித உறவை வளர்த்தது. இதேபோல் உலகில் ஒவ்வொரு பகுதியிலும் நடந்து கொண்டு தான் இருக்கிறது. அராபியமொழி, ஆப்பிரிக்க நீக்ரோ மொழிகள் எல்லாவற்றுக்கும் அடிப்படையாக இருக்கிறது. இருபது நூற்றாண்டுகளாக அலெக்ஸாண்ட்ரியா, பல்வேறு இனங்கள் கூடும் இடமாக இருந்து வந்திருக்கிறது. அலெக்ஸாண்ட்ரியா, கெய்ரோ, நிக்கோஷியா ஆகிய இடங்களில் காணப்படும் எண்ணற்றவிதமான முகங்களைப் பார்க்கும்போது எப்படியெல்லாம் இனக்கலப்பு ஏற்பட்டுள்ளது என்பது நினைவுக்கு வருகிறது. இந்திய வழக்கப்படி இரு நதிகள் கூடும் இடம் புண்ணிய க்ஷேத்திரமாகிறது. அதேபோல் இரு இனங்கள் கூடும் இடம் க்ஷேத்திரமாக வேண்டும். ஏனெனில் மனித ஒருமைக்கான நடவடிக்கை அங்குதானே நிகழ்கிறது?

இன்னும் பலமொழிகளும் இதேபோல் பரவியுள்ளன. கிறிஸ்து பேசிய அராமிக் மொழியினுடைய லிபி நீண்ட நெடுந்தூரம் பரவியுள்ளது. கிரேக்க, லத்தீன் பாஷைகள் இன்றளவும் இருப்பதுடன் நவீன மொழிகள் எல்லாவற்றிலும் கலந்துள்ளது. ஆங்கில மொழியின் பரவல் கவனிக்கத்தக்கது. ரத்தக்கலப்பு, மொழிக்கலப்பு ஆகியவை ஒருபுறமிருக்க, வேறு பல துறைகளிலும் ஒருமை ஏற்பட்டிருக்கிற எண்ணம், மதம், உற்பத்தி முறை, வாழ்க்கை முறை போன்ற துறைகளும் ஒருமையை வளர்த்திருக்கின்றன.

புத்த, கிறிஸ்துவ, இஸ்லாம் மதங்கள் உலகம் பூராவும் பரவியுள்ளன. ஒருபுறம் பலவழிகளிலும் மனித வர்க்கம் ஐக்கியப்பட முயன்று கொண்டிருந்த போதே மறுபுறம் வேறுவழிகளில் பேதத்தை வளர்த்துக்கொண்டு போயிற்று. இன்று உலகில் பிரதான இடங்களாக

விளங்குபவைகளின் ஆரம்பகாலக் குடியிருப்பைப் பற்றி இன்றும் பலவிதமான கருத்துக்கள் வெளியிடப் படுகின்றன. அவர்கள் பல இடங்களுக்கும் பரவிச் சென்றது தானது ஒரு பிரிவினரைச் பலபிரிவினராகச் செய்தது. இன்று பல்வேறு மங்கோலிய, ஆரிய, நீக்ரோ இனங்கள் உள்ளன. ஆனால் ஒரு காலத்தில் ஒவ்வொன்றிலும் ஒரு இனம் மட்டுமே இருந்தது.

இனங்கள் ஒன்றுபட வேண்டியதில் கவனம் செலுத்தும்போது, பிரிவினால் பல்வேறு இனங்கள் தோன்றியதைப் பற்றி நினைப்பது தவறல்லவா? மனிதர்கள் ஆரம்ப காலத்தில் சிறையிலடைபட்டவர்களைப் போல ஒருவரோடொருவர் தொடர்பின்றி வாழ்ந்தனர். தனித்தனியே ஒவ்வோர் இடத்தில் ஒரு கூட்டம் வாழ்ந்தது.

தனிமை வாழ்வை விடுத்து சேர்ந்து கொள்ளத் தொடங்கியதும் அவர்கள் மிக்க மகிழ்வுடன் புதுப் புது இடங்களை நாடிப்புறப்பட்டனர். ஒவ்வொரு கூட்டமாக ஒவ்வொரு திசையில் செல்லவே பலவாறாகப் பிரிந்து போயிற்று. இந்தப் பிரிவினைதான் இவைகள் ஒன்று படுவதற்கு உதவக்கூடிய கருவியாக இருக்க வேண்டும். பிரிந்தவர்கள் பல்வேறு பகுதிகளுக்குச் சென்றார்கள். அங்கே எதிர்ப்பட்ட மக்களுடன் சைகைகளைச் கொண்டே பேச முடிந்தது. கலாசார உறவு சிறு அளவில் தொடங்கியது. இதிலிருந்து, தத்துவங்கள் பரவத் தொடங்கிய காலத்துக்கிடையே நீண்ட இடை வெளி இருக்கிறது புராதன எகிப்தை சேர்ந்த அக்னுடன், கன்பூஷியஸ், காண்ட், காந்தி ஆகியவர்களுடைய தத்துவங்களும் உபநிஷத்துக்களும் மனிதகுல ஒருமைக்கு வழி வகுத்தன. உற்பத்தி முறை, வாழ்க்கை முறை, உபயோகப்படுத்தப் பட்ட பொருள்கள் ஆகியவற்றில் உள்ள ஒருமைக்கு ஜாபிதா கொடுப்பதென்றால் அதற்கு முடிவே இருக்காது. இன்று அமெரிக்க-நைலான் உலகில் எவ்வளவு தூர தேசங்களுக் கெல்லாம் செல்கிறதோ அவ்வளவு தூரம் டாக்கா மஸ்லினும் சென்றிருக்கிறது. யந்திரங்களைக் கொண்டு நூல் நூற்கும் வியாட் கண்டுபிடித்த முறை தான் இன்று அபிவிருத்திகளுடன் உலக முழுவதும்

இருந்து வருகிறது. உலகிலேயே வெகு வேகமாகப் பரவிய பொருள் வெடி மருந்துதான்.

மோட்டார்கள், கம்பி யில்லாத் தந்தி, விமானம், ஆகியவை தூரத்தைக் குறைத்து விட்டன. இவற்றை பயன்படுத்தாத நாடே இல்லை யெனலாம். சரித்திர காலத்தில் பழக்க வழக்கங்கள், மொழி, உபயோகிக்கும் பொருள்கள், உற்பத்தி முறை, தத்துவம், மதம் போன்ற வற்றின் மூலமே ஒருமை காணப்பட்டது. இது மனித குல வளர்ச்சியின் ஒரு பகுதியாகவே இருந்தது. ஒரு சாரார் வளர்ச்சி பெற்ற போதெல்லாம் மற்ற பகுதிக ளுடன் சென்று கலந்ததுடன் அவர்களிடமிருந்தும் சில அம்சங்களைக் கைக்கொண்டனர். சரித்திரத்தின் உதய காலத்திலிருந்து இது நடைபெற்று வருகிறது.

கலாசாரத் துறையில் இதற்கு சில உதாரணங்கள் எனக்குக் கிடைத்துள்ளன. இந்தோனேஷ்யாவில் 'ராங் கென்' எனப்படும் ஒருவகை நாட்டியம் இருக்கிறது. இந்தியாவில் பீல் எனப்படும் மலை ஜாதியாருடைய நடனத்தைப் பார்த்தவர்கள் இருக்கலாம். அதைப் போன்றதுவே இதுவும் ஆண்களும், பெண்களும் கோஷ்டி கோஷ்டியாக— அவர்கள் தனித்தனியேதான் இருப்பார்கள். ஏனெனில் இந்தியாவில் ஆண் ஒரு பெண்ணைத் தொடுவது தவறல்லவா?— எதிரெதிரே நின்றுகொண்டு நெருங்கியும், விலகியும் ஒரு வித நடனம் ஆடுவார்கள். 'ராங்கென்' உணர்வூட்டும் ஒருவித நடன மென்று என்னிடம் கூறப்பட்டது. ஆனால் அதைப் பார்க்கக் குடும்பத்துடன் செல்லலாம், இது அமெரிக்கா வுக்குப் பரவியது. அங்கே அது 'பூகி வூகி' என்றழைக்கப் படுகிறது. அது அமெரிக்காவிலிருந்து 'ஜோகட் மாடர்ன்' என்ற பெயரில் சிங்கப்பூருக்கு வந்திருக்கிறது. இப்போது அது பெற்றிருக்கும் உருவம் எப்படித் தெரியுமா? காம உணர்ச்சியைத் தூண்டும் நடனங்களில் உலகிலேயே சிறந்ததாக இது கருதப்படுகிறது. இதில் ஆணும் பெண்ணும் ஒருவரை யொருவர் தொடாவிட்டாலும் கூட அருகே நெருங்கும்போதும், விலகிச் செல்லும்போதும் காட்டும் அங்க அசைவு, உணர்ச்சி வசப்பட்டு தங்கள்

காம இச்சையைத் தணித்துக்கொள்ளும் விதத்திலே உள்ளது. இதற்கு முஸ்லிம்களுடைய நம்பிக்கை ஒரு காரணமாக இருக்கலாம். தங்கள் நம்பிக்கையை மீருமல் அதே நேரத்தில் நடனத்தின் மூலம் இன்பத்தை அனுபவிக்க அவர்கள் விரும்பியிருக்கலாம்.

பாலித் தீவில் கமலான் என்ற கோஷ்டி இசை உள்ளது. இது பல வெண்கலக் கருவிகளால் ஆனது. தீவிலுள்ள ஒவ்வொரு கிராமத்திலும் இதைக் காணலாம். இந்த கோஷ்டியில் ஐம்பது பேர்கள்கூட இருப்பார்கள். பாடகர்களின் வயது பத்திலிருந்து எழுபது வரை இருக்கும். இது இப்போது பாலித் தீவின் பெரிய நகரமான டென்பாஸனில், ஹாலிவுட் படங்களை விளம்பரப்படுத்துவதற்காக உபயோகப்படுகிறது. இதுவும் கலாசார ஒருமைக்கான ஒரு முறைதான்—ஆனால் துரதிர்ஷ்டவசமானது. கமலான் இசைக் கேற்ப பாலிப் பெண்கள் நடனமாடுகின்றனர். அவர்கள் இடையை மறைத்திருந்த போதிலும் மார்பகத்தை மூடுவதில்லை. மூடாததின் காரணமாகவோ என்னவோ அவை உருண்டு திரண்டிருக்கும். கடற்கரை யோரப் பட்டினங்கள் தவிர இதர இடங்களில் இவ்வாறு நடக்கிறது. இது நன்மை அளிப்பதல்ல என்று நான் கூறியபோது பாலி கவர்னருடைய மனைவி திடுக்கிட்டுப் போய் விட்டாள். ஒரு வேளை அமெரிக்கப் பெண்கள் கலிபோர்னியாவின் சூர்ய ஒளி மிக்க பகுதிகளில் திறந்த மார்புடன் நடமாடும்போது பாலித் தீவின் பெண்கள் மூன்று துணிகளால் தங்கள் மார்பகங்களை மூடிக்கொள்ளலாம். இது சிலருக்கு முட்டாள் தனமாகத் தோன்றலாம். ஆனால் இருபது நூற்ருண்டுகளுக்கு முன்பு வெளிநாட்டு மந்திரியோ பிரதம மந்திரியோ என்ன சொன்னார் என்பதை யார் நினைவில் வைத்துக் கொண்டிருக்கிருர்கள்? பெரிய தளகர்த்தர்களுடைய பெயர் ஐந்து அல்லது பத்து நூற்ருண்டுகளுக்கு ஞாபகத்தில் இருக்கலாம். ஆனால் மதபோதகர்களின் விஷயமே வேறு. யுத்தங்கள், வீரர்கள், ராஜதந்திரிகள் ஆகியவர்களைப் பொறுத்தவரை அவர்கள் மறைந்ததும் அவர்களுடைய நினைவும் அகன்று விடுகிறது.

கலாசார ஒருமைக்கும் ஒரு வரையறை இருந்து வந்திருக்கிறது. ஏனெனில் இதுவரை செய்யப்பட்ட முயற்சிகள் எதுவும் உலகம் பூராவிலும் பரவியதாக இல்லை. கிரேக்க, சம்ஸ்கிருத, அராமி, அராபி மொழிகள் நெடுந் தூரம் பரவியுள்ளன. ஆனால் உலகம் பூராவும் பரவ வில்லை. பல்வேறு கலாசாரங்களும் பலதிசைகளிலும் பரவி ஏராளமான மக்களை தனது செல்வாக்கின்கீழ் கொண்டு வந்திருக்கிறது; ஆனால் உலகம் பூராவையுமல்ல. எனவே இம்முறை குறுகிய ஒரு எல்லைக்குள்தான் இருக்க முடியும். எப்போதுமே உலக முழுவதும் பரவ முடியாது என்ற எண்ணம் சிலருக்குத் தோன்றலாம். ஆக்கிரமிப்பு, அல்லது ஒரு கலாசாரம் மட்டும் பரவுவது ஆகிய வழிகள் மட்டுமே மனித குலத்துக்கு இருக்குமானால் அது சரியாக இருக்கலாம். ஆதி நாட்களில் ஒரு நாட்டை இன்னொரு நாடு வெற்றி கொள்வதே—ராணுவ பலத்தைக்கொண்டும், சில சமயம் தத்துவங்களினாலும்—ஒருதேச மக்கள் இன்னொரு தேச மக்களுடன் உறவுகொள்ள இடமளித்தது. எந்த ஒரு நாடும் இன்னொரு நாட்டுக்கு அடிமைப் படுத்தப்படாத முறையில் புத்திசாலித்தனமான ஒரு திட்டம் வகுத்து உலக மக்களெல்லாம் சமநிலையடைய வழி இருக்கிறது.

# உள்நாட்டில் சமநிலை

வெவ்வேறு நாட்டினிடையே ஒருவித சமநிலை ஏற்பட்டிருப்பது ஒருபுறமிருக்க, ஒரு நாட்டுக்குள்ளேயே இது நேர்ந்திருக்கிறது. சரித்திரத்தின் ஆரம்பகால முதலே ஏற்றத் தாழ்வு இருந்து வந்திருக்கிறது. அதேபோல் சமநிலையடைய வேண்டுமென்ற மனிதனுடைய வேட்கையும் இருந்து வந்திருக்கலாம். ஐரோப்பாவின் பல்வேறு பகுதிகளில் உள்நாட்டில் அவர்கள் அடைந்துள்ள சமநிலை ஆச்சர்யமளிப்பதாக இருக்கிறது. ஸ்வீடிஷ் சோஷலிஸம் உயர்ந்த—குறைந்தபட்ச வருமான அளவை 20 : 1 என்ற விகிதத்துக்குள் கொண்டுவந்து விட்டது. ஸ்வீடன் பிரதம மந்திரியுடைய சம்பளம், அந்நாட்டு தோட்டியினுடைய குறைந்தபட்ச சம்பளத்தைப்போல் ஐந்து மடங்குக்கும் குறைவானது. வீட்டு வேலைக்காரிகளுக்கு வீட்டில் அவளுக்கென ஒரு அறை இருக்கவேண்டுமென்ற சட்டம் மேற்கு ஐரோப்பாவில் பல நாடுகளில் அமுலில் இருக்கிறது. இது உள்நாட்டில் சமநிலைக்கு சரியான அறிகுறியாகும்.

முதலாளித்துவ அமெரிக்காவிலும்கூட ரயில்வே என்ஜின் டிரைவருடைய சம்பளமும், ராஜ்ய சர்க்கார் காரியதரிசி ஒருவருடைய சம்பளமும் அநேகமாக சமமாக இருக்கிறது. க்ஷேமநல சர்க்கார் தத்துவம் உள்நாட்டில் சமநிலை ஏற்பட மேலும் ஆக்கமளிப்பதாக இருக்கிறது. வேலையில்லாதோர் இன்ஷ்யூரன்ஸ், குழந்தைகளுக்கும் வயதானவர்களுக்கும் பென்ஷன், இலவச வைத்தியம், வீடு கட்டித் தருதல், சர்வகலாசாலைகளில் உபகாரச் சம்பளம் போன்ற வசதிகளைச் செய்து கொடுத்து மேற்கத்திய நாடுகள் க்ஷேமநல சர்க்கார் என்ற பெயருக்கேற்ப விளங்குகின்றன. பிரஜைகளுக்கு சம உரிமை உள்ளது. ஆனால் இது எல்லா நாடுகளிலும் இல்லை.

ரோமாபுரி சர்க்கார் தன்னுடைய மக்களுக்கு ஏராள மான உணவும் கேளிக்கைகளும் கிடைக்கச் செய்வதி லேயே அதிக அக்கறை காட்டியது. நவீன சர்க்கார்கள் இக்கருத்தையே எல்லாத் துறைகளிலும் குறைந்தபட்ச தேவை என்ற அடிப்படையில் அமுல் நடத்துகின்றன. வளரும் நாகரிகத்தில் விழிப்படைந்த மக்கள் இயற்கை யாகவே உணர்வு பெற்றவர்களாக இருப்பார்கள். அச் சமயங்களில் சமூக உணர்ச்சி தாராளமானதாக இருக்கும். மற்ற துறைகளில் எப்படி யிருந்த போதிலும் ரஷ்யாவில் இலவச மருந்து, ஆரம்பக் கல்வி ஆகிய துறைகளில் செய் துள்ளதற்கு இணையே கிடையாது.

ஒருவனுக்கும் மற்றொருவனுக்கு மிடையே பேதம் கிடையாது. இருவரும் அனேகமாக சமமானவர்கள் என்ற கண் கொண்டு பார்க்கும்போது உள்நாட்டில் சம நிலை, நவீன நாகரிகத்தில் வெள்ளை நாடுகளில் பெருமள வுக்கு ஏற்பட்டிருக்கிறது. ஒவ்வொன்றும் ஒவ்வொரு துறையில் இணையற்றதாக விளங்கலாம். க்ஷேம நல சர்க்கார் மூலம் ஏற்படக்கூடிய இத்தகைய சமநிலை பணம் படைத்த வெள்ளை நாடுகளுடனேயே நின்றுவிட் டது. வெள்ளையரல்லாத நாடுகளிலுள்ள மக்கள் அதைப் பற்றிப் பேசத்தான் முடியும். அங்கே வறுமை வாட்டு கிறது. மக்கள், உணர்வு பெற்று எழும் விதத்தில் இல்லை. அவர்களுடைய சமூக உணர்ச்சி பெருந்தன்மையுடைய தாக இருக்க முடியவில்லை. புதிய சமூக அஸ்திவாரத்தை நாட்ட, மக்களை விழிப்படையச் செய்து அவர்களுடைய சிருஷ்டி சக்தியை எழுச்சி பெறச் செய்தாலன்றி சாத்திய மில்லை.

சுபிட்சமும், ஏற்றத் தாழ்வும் எதிர்மறை விகிதத்தில் உள்ளன. ஒரு நாடு எவ்வளவுக் கெவ்வளவு சுபிட்சமாக இருக்கிறதோ அவ்வளவுக்கு அந்நாட்டு மக்களிடையே ஏற்றத் தாழ்வு குறைவாக இருக்கின்றது. வறுமையும் ஏற்றத் தாழ்வும் இணையாக நடை போடுகின்றன. ஏனெனில் அவை இரண்டுமே அழிந்துபோன நாகரிகத்தி லிருந்து பிறந்தவை.

வறுமை வாட்டும்போது தீவிர சமூக உணர்ச்சி இருப்பது முடியாது. எனவே உச்ச கட்டத்தையுடைய முன்னேறும் நாகரிகத்தில் தான் இந்த சமநிலையைக் காண முடிகிறது. தனது எல்லைக்குள்ளே இருக்கும் பல்வேறு வர்க்கங்களிடையே நவீன நாகரிகம் சமநிலையை ஏற்படுத்தி யிருக்கிறது. தேச எல்லைகள் தான் முக்கியமானதாக இருக்கிறது. நவீன நாகரிகத்துக்கே உரியதான வாழ்க்கைத் தரத்தை உயர்த்துதல் தேசிய எல்லைகளுக்குள்ளேயே நடக்கிறது என்பதையும் மனதில் கொள்ள வேண்டும்.

பிரபுக்கள் குடும்பத்தை சேர்ந்த ஒரு பெண்ணும் பிரதம மந்திரியின் மகளுடைய சலவைத் தொழிலாளியான ஒரு பெண்ணும் சேர்ந்து வந்தால் அதில் யார் பிரபுவின் மகள் அல்லது சலவைத் தொழிலாளி என்று கண்டு பிடிக்க முடியாது. பாரிஸிலுள்ள நடைபாதை ஓட்டல்களில் உட்கார்ந்து கொண்டு மணிக் கணக்காக சலிப்பின்றி போவோர் வருவோரைப் பார்த்துக் கொண்டிருக்கலாம். ஆனால் அவர்கள் யார் யார் என்று மட்டும் சொல்ல முடியாது. ஏனெனில் எல்லோருமே நேர்த்தியான உடையணிந்திருப்பர். இந்தியாவில்கூட தோட்டிப் பெண்ணும், சலவை செய்யும் பெண்ணும் மற்ற பெண்கள் அளவு அழகாகத்தான் இருக்கிறார்கள். ஆனால் அவர்களுடைய உடைதான் காட்டிக் கொடுத்து விடுகிறது. அதிலிருந்தே யார் யார் என்பதைப் புரிந்துகொள்ள முடிகிறது. உடை விஷயத்தில் ஐரோப்பாவில் சமத்துவம் நிலவுகிறது. மிகக் கூர்மையாக ஆராய்ந்தால் ஏதாவது வித்தியாசம் புலப்படலாம்.

ஸ்டாக் ஹோம் தெருக்களிலே தொழிலாளி என்று ஒருவனைக் காட்டவே முடியாது. ஏனெனில் அவ்வளவு நேர்த்தியாக அவன் உடையணிகிறான். ஐரோப்பாவில் நிலவும் சமூக பொருளாதார சமத்துவம் காரணமாக ஒவ்வொரு ஐரோப்பியனும் மனிதன் என்ற கௌரவத்துடன் நடமாட முடிகிறது. எனவே மொழி, கலாசாரம், இனக் கலப்பு ஆகியவற்றினால் மட்டுமின்றி சமூக சமத்வத்தின் காரணமாகவும் சமநிலை ஏற்பட்டிருக்கிறது.

சரித்திரத்தின் குறிப்பிட்ட ஒரு கட்டத்தில் மூன்று மகான்கள் இருந்தனர். அவர்கள் ஏக காலத்தில் சிந்தித்தனர்; செயலாற்றினர். அவர்கள் புத்தர், சாக்ரடீஸ், கன்பூஷியஸ் ஆகியோர். ஆனால் அந்த தேச மக்களுக்கு மற்றவரைப்பற்றி அறிய பல நூற்றாண்டுகள் பிடித்தது. ஆனால் இன்று அந்த பிரச்னையே கிடையாது. அப்படிப் பட்ட மூன்று மகான்கள் இன்று இருந்து அவர்கள் பழைய சம்பிரதாய வழியாலன்றி புதியதோர் வழியில் உலக நல்வாழ்வுக்கான யோசனை கூறுவார்களே யானால் அவர்கள் கடிதப் போக்குவரத்து மூலம் தொடர்பு கொள்ள முடியும். ஆனால் இதிலும் சில கஷ்டங்கள் உள்ளன. ஏராளமான தொழிற்சாலைகளும் அணுகுண்டுகளும் உள்ள நாட்டைச் சேர்ந்த மகானுடைய குரலே ஆதிக்கம் வகிக்கும். இத்தகைய குறைபாடுகள் இருந்த போதிலும் அறிவைக் கொண்டும், செய்து முடிக்கவேண்டுமென்ற உறுதியுடனும் சமரிலை ஏற்படுவதற்கான வழி வகைகளைக் காண முடியும்.

நான் இளைஞனாக இருந்தபோது, இறக்குமுன் வெள்ளையர்களும் கறுப்பர்களும் கலப்பு மணம் செய்து கொண்டு அவர்களுக்குப் பிறக்கும் குழந்தைகளைக் காண வேண்டும் என்று எண்ணுவது வழக்கம். நாமெல்லாம் கலப்பு ஜாதியினர்தான். இந்த கலப்பு வெகுகாலத்துக்கு முன்பு ஏற்பட்டது. ஒருவர், மற்றொருவருடன் சேர்ந்து குழந்தைகளை உற்பத்தி செய்வது என்பதாக புராதன இந்திய முனிவர் ஒருவர் ஜாதியை வர்ணித்திருக்கிறார்.

பிராமணன்—பங்கி, வெள்ளையன்—நீக்ரோ இவர்கள் எல்லோருமே மற்றவருடன் சேர்ந்து குழந்தைகளை உற்பத்தி செய்ய முடியும். இதன் மூலம் மனித குல ஒருமை ஏற்பட முடியும் என்ற ஆர்வத்துடன் ஆண்களும் பெண்களும் நடந்துகொண்டால் பொற்காலத்துக்கான அஸ்திவாரத்தையும், உலக சமாதானத்தையும் காண முடியும். இது நடந்தாலும் நடக்காவிட்டாலும் இதர வழிகளில் ஏற்படும் அபிவிருத்தி தீர்மானமான விளைவுகளை ஏற்படுத்த முடியும்.

# எதிர்காலம் பற்றிய கனவுகள்

சில கருத்துக்கள் ஏற்கனவே அமுலில் உள்ளன. அவை அரசியல் ரீதியான விளைவுகளை ஏற்படுத்தவல்ல தாக இன்று இல்லாவிட்டாலும் கூட எதிர்காலத்தில் அத்தகையவையாக ஆகலாம். அமெரிக்க ஜனாதிபதி யையோ, ரஷ்ய பிரதம மந்திரியையோ இந்தியன், ஓட்டின் மூலம் அவர்கள் பதவியை விட்டுப் போகும்படி செய்ய முடியாது. தன்னுடைய ஆட்சியாளர்களைத் தேர்ந் தெடுக்க மட்டுமே அவன் ஓட்டைப் பயன்படுத்த முடி யும். அதேபோல் ஒரு அமெரிக்கனோ அல்லது ரஷ்யனோ ஓட் மூலம் இந்தியப் பிரதம மந்திரியை பதவியை விட்டுப் போகும்படி செய்ய முடியாது. அவர்களுடைய ஓட்டும் தங்கள் சொந்த ஆட்சியாளர்களைத் 'தேர்ந்தெடுக்க மட்டுமே பயன்படும். நாம் ஜனநாயக அமைப்புகளிலும், சர்வாதிகார அமைப்புகளிலும் வாழ்கிறோம். இரண்டுக்கு மிடையே அடிக்கடி யுத்தங்கள் நிகழ்கின்றன. இந்த யுத்தங்கள் நாம் உள்நாட்டில் செய்யும் வேறெதையும் விட அதிகமான அளவுக்கு நமது விதியை நிர்ணயிக் கின்றன. ஆயினும் யுத்தம்—சமாதானம் ஆகிய விஷ யங்கள் பற்றிப் பேச யாருக்கும் உரிமையில்லை.

இது எல்லா நாட்டு மக்களுக்கும் பொருந்தும். வயது வந்தவர்கள் அனைவருக்கும் அளிக்கப்பட்டுள்ள ஓட்டின் அதிகாரம் மிகக் குறுகிய வரையறைக்குட்பட் டது. தேசிய எல்லைக்குள் தான் அதற்கு மதிப்பு. பலாத் காரத்தின் மூலமே ஒரு நாடு இன்னொரு நாட்டு மக்களின் விதியைத் தீர்மானிக்கிறது. உலகம் பூராவிலுமுள்ள மக்களிடையே ஓட் எடுத்து யுத்தமோ சமாதானமோ தீர்மானிக்கப்படுவதில்லை. தேசிய எல்லைக்குள் தான் தீர்மானிக்கப்படுகிறது. அமெரிக்கா, ரஷ்யா, இந்தியா அல்லது வேறெந்த தேசமாகிலும் எந்தவிதமாக ஆளப் படவேண்டும் என்று சொல்வதற்கு உலகிலுள்ள ஒவ்

வொரு பிரஜைக்கும் ஒரு ஓட் இருக்கவேண்டும் என்ற கோரிக்கை தொடர்ந்து வற்புறுத்தப்படுகிறது.

உலக சர்க்கார், அது எப்போதேனும் ஏற்பட்டால் எல்லா பிரச்னைகளையும் கவனிக்கக்கூடிய விதத்தில் இராது. எனவே உலக பார்லிமெண்டுக்கு கட்டுப்பட்ட உலக சர்க்காருக்கு எந்தெந்த விஷயங்களில் அதிகார மளிப்பது என்பது பற்றிய ஜாபிதாவை சுலபமாகத் தயாரிக்க முடியும். வயது வந்தவர்களனைவருக்கும் வாக்குரிமை அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பட்ட உலக பார்லிமெண்டுக்கு ஒரு வரையறைக்குட்பட்ட அதிகாரம் மட்டுமே இருக்கும். உலக நாடுகள் எல்லாவற்றுக்கும் சமப் பிரதிநிதித்வமுள்ள மேல்சபை ஒன்றும் இருக்கலாம். ஜனத்தொகை அதிகமுள்ள நாடுகள் அதிகப் பிரதிநிதித்வம் பெறும் அபாயத்தை இதன் மூலம் தவிர்க்க முடியும். மனித வர்க்க ஒற்றுமை என்ற பின்னணியில் பார்த்தால் இன்றுள்ள தேசிய சர்க்கார்கள் எல்லாமே கொடுமை வாய்ந்தவையாகும். ஆனாலும் தேசிய சர்க்கார்கள் இருக்கத்தான் வேண்டும். இவைகளை ஒழித்து விட்டு உலக சர்க்காரை ஏற்படுத்தினால் அது பயங்கரக் கொடுமையாக இருக்கும் இதை அடைவது என்பது சாத்தியமானதல்ல. எனவே உலக சர்க்கார், யுத்தம், சமாதானம், ராணுவம் பற்றிய சில அம்சங்கள், அயல் நாட்டுக் கொள்கை, சில பொருளாதார விஷயங்கள் ஆகியவைகளை மட்டுமே கவனிக்கும். இத்தகைய உலக சர்க்கார் அமையும்போது தேசிய சர்க்கார்கள் மனித இனத்தை பிளவுபடுத்த முடியாது. ஜனநாயகம் முதல் தடவையாக நேர்மையாக இயங்கும்.

வயது வந்தவர்களுடைய ஓட் பல காரியங்களுக்கு தேசிய ஓட்டாகவே இருக்கும். அது பரந்த அளவில் முனிஸிபல் ஓட்டாகவும், கிராம ஓட்டாகவும், ஆகும் போதே சமாதானம், சுபிட்சம் ஆகிய துறைகளில் அதிகாரமுள்ள உலக ஓட்டாகவும் ஒரு காலத்தில் ஆகும். கிராமங்களுக்காக, கிராமங்களினால், கிராம ஆட்சி ஒருபுறமும் மனித குலத்துக்காக, மனிதகுலத்தினால் மனிதகுல சர்க்கார் மறுபுறமும் ஏற்படும்போது உலகில் முதல் தடவை

யாக மக்களுக்காக மக்களால் நடத்தப்படும் மக்களின் சர்க்கார் ஏற்படும்.

மூலதன சேமிப்புக்கான சர்வதேச நிதி ஒன்று ஏற்படுத்தப்பட்டாலன்றி உலக சர்க்கார் நிலைக்காது. அந்த நிதிக்கு ஒவ்வொரு தேசத்தினிடமிருந்தும் அதன் சக்திக்கியன்ற அளவு பெற்று ஒவ்வொரு நாட்டுக்கும் அதன் தேவைககேற்ப அளிக்கப்படும். இம்முறை தெளிவற்றதாகக் காணப்பட்டால் வேறொரு முறையைக் கையாளலாம். ஒவ்வொரு நாட்டின் பொருளாதார நிலைக்கேற்ப அந்த நாடு கொடுக்க வேண்டியது நிர்ணயிக்கப்படும். உலக அபிவிருத்தி சபை ஒன்று மூலதனம், யந்திரசாதனம், திறமை ஆகியவற்றை அபிவிருத்தியடையாத நாடுகளுக்கு வழங்கும். அதிகமாகக் கொடுக்கும் நாடுகளுக்குக் குறைவாகத் தேவைப்படும். அதே போல் அதிகமாகத் தேவைப்படும் நாடு குறைவாகக் கொடுக்கும். ஆனல் இந்த கொடுக்கல் வாங்கல் உலகநாடுகள் முழுவதுக்குமாக இருக்க வேண்டும். அப்போது தான் மனிதகுல ஒற்றுமைக்கு சின்னமாக அது இருக்க முடியும். உலக பார்லிமெண்ட், உலக சர்க்கார் ஆகிய கருத்துக்களைப் போல் மூலதன சேமிப்புக்கான சர்வதேச நிதி பற்றிய கருத்து அதிககாலமாக வற்புறுத்தப்பட்டு வரவில்லை.

இந்த சந்தர்ப்பத்தில் இந்திய பார்லிமெண்டில் நடைபெற்ற விவாதமும் அதன் விளைவாக ஏற்பட்ட அர்த்தமற்ற சல சலப்பும் கவனிக்கத்தக்கவை. கம்யூனிஸ்ட் கட்சியும், சர்க்கார் கட்சியும் மோதிக்கொண்டன. அமெரிக்க பரஸ்பர பாதுகாப்புச் சட்டத்திலிருந்து சில பகுதிகளை சுட்டிக்காட்டி எப்படி இந்தியா அமெரிக்காவின் பாதுகாப்புக்கு கட்டுப்பட்டிருக்கிறது என்பதை நிரூபிக்க கம்யூனிஸ்டுகள் முயன்றனர். அதே போல் இந்திய சர்க்காரும் அமெரிக்க உதவிசம்பந்தமான இந்திய சட்டத்தின் பகுதிகளை எடுத்துக்காட்டி, இந்தியா சுதந்திரமானது என்று நிரூபிக்க முயன்றது. இத்துடன் பர்மா பிரதமர் ஊ நூ சமீபத்தில் செய்த பிரசங்கத்தை ஒப்பிட்டுப் பார்க்கலாம். அமெரிக்கா எந்த நிபந்தனையுடன் பர்மாவுக்கு

உதவியளிக்க முன்வந்ததோ அதே நிபந்தனையின் பேரில் உதவியளிக்குமாறு ரஷ்யாவையும் சீனாவையும் கேட்கப் போவதாக அவர் கூறினார். வெளிநாட்டு உதவியைப் பற்றி ஒன்றைச் சொல்ல வேண்டியிருக்கிறது. அது கொடுப்பவர்களிடம் திமிரான போக்கையும், பெற்றுக் கொள்பவர்களிடம் தாழ்வு மனப்பான்மையையும் ஏற் படுத்துகிறது. சமாதானம், ஆயுதப் பரிகரணம் ஆகியவை ஒருபுறத்திலும், உலக அபிவிருத்தி சபை மற்றொரு புறத் திலுமாக இரண்டுக்கு மிடையே ஏதோ ஒரு தொடர்பு இருப்பதாகப் புலப்படுகிறது. மாஸ்கோ அல்லது நியூ யார்க்கினுடைய பாதுகாப்பு அதனுடைய ராணுவ பலத்தைவிட அதிகமாக உலகத்தில் சுபிட்சத்தை அதி கரிப்பதையே பொறுத்திருக்கிறது. உலக அபிவிருத்திக் கான நிதியைத் திரட்ட வெள்ளை உலகத்தைச் சேர்ந்த பெரும் நாடுகள் உதவவேண்டும். ஐரோப்பா—அமெரிக் காவில் சேமிப்பு, ஆப்ரிக்கா—ஆசியாவில் வளர்ச்சிக்கு உதவும்.

கொடுப்பவருக்கும், பெற்றுக்கொள்பவருக்குமிடையே பரஸ்பர உதவியாக வெளிநாட்டு உதவி கருதப்பட்டா லன்றி நாடுகளிடையே சரியான உறவு நிலவமுடியாது. தர்மத்தைப்போல அளிக்கப்படும் உதவி யுத்தத்தைத் தடுக்கக் கூடியதாக இருக்கமுடியாது. உள்நாட்டில் வாழ்க்கைத்தரத்தை உயர்த்துவதை, உலகிலுள்ள எல்லா மக்களுக்கும் கண்ணியமான வாழ்க்கைத்தரம் வேண்டும் என்பதாகக் கொண்டு ஆவன செய்யும் உலக அபிவிருத்தி சபை வீழ்ச்சி யடையாத ஒரு நாகரிகத்தை தோற்றுவிக்க முடியும். ஆனால் இத்தகைய கொள்கைக்கு குறுக்கே நிற் கும் முட்டுக்கட்டைகள் பயங்கரமானவை. ஒருநாட்டு மக்கள் இன்னொரு நாட்டு மக்களுடைய சுபிட்சத்துக்கு உதவுவதைவிட தங்களுடைய ராணுவ பலத்தைப் பெருக் கிக் கொள்ளவே விரும்புகிறார்கள். இத்தகைய நாகரிகத் தின் வீழ்ச்சியையும், யுத்தத்தையும் தடுக்கக்கூடிய ஒரு உலக அபிவிருத்தி சபையை ஏற்படுத்த மனிதவர்க்கம் தயாராக இருக்கிறதா இல்லையா என்பது ஒருவேளை அடுத்த உலக யுத்தம் முடிவடைந்ததும் தெரிந்துவிடும்.

மனிதகுல சமநிலைக்கான மற்றொரு முயற்சி வேறொரு துறையிலும் புலனாகிறது. செல்வம் கொழிக்கும் நாடுகள் பிற்போக்கிலுள்ள நாடுகளுக்குத் தங்கள் தொழில் நுணுக்கத் திறமையைக் கொடுத்து உதவ முன்வருவதே அது. இந்த ஆர்வம் எந்த விதத்தில் இன்று காட்டப் படுகிறதோ அது விரும்பத்தக்கதாக இல்லை. ராணுவக் கூட்டுறவுடன் அவை பிணைக்கப்பட்டுள்ளன. தன்னைப் பாதுகாத்துக் கொள்ளும் முயற்சியில் மனித குல நலனுக் கான ஆர்வம் அடங்கி விடுகிறது. மேலும் ஐரோப்பிய தொழில் நுணுக்க முறையை உலகம் பூராவிலும் பயன் படுத்த முடியும் என்று எண்ணுவதும் தவறானதாகும். இன்று இதுதான் நடக்கிறது. உலகப் பொருளாதார அபிவிருத்திக்கு புத்திசாலித்தனமாக விஞ்ஞானத்தைப் பயன்படுத்த வேண்டும். ஆனால் ஐரோப்பிய விவசாயத் தொழில் முறையை அப்படியே இதர பகுதிகளில் அமுல் நடத்தவே முயற்சி செய்யப்படுகிறது. இதன் விளைவாக செல்வ நாடுகள், கொடுப்பதும், பின்தங்கிய நாடுகள் ஏற்றுக்கொள்வதும் சமநிலையை ஏற்படுத்துவதற்குப் பதிலாக பலவந்தப் படுத்துவதாக முடிகின்றன.

உலகம் முழுவதும் அப்படியே பின்பற்றக் கூடிய ஒரு நாகரிகத்தை மனித குலம் இன்னும் தோற்றுவிக்கவில்லை. ஒவ்வொன்றிலிருந்தும் கற்றுக்கொள்ள வேண்டியது எவ்வளவோ இருக்கிறது. உதவி கொடுப்பதும், பெற்றுக் கொள்வதுமாக இருக்கக் கூடாது. ஒருவருக்கொருவர் அறிவைப் பரிமாறிக்கொள்வதாக இருக்க வேண்டும். தத்துவார்த்த, பொருளாதார உறவுகளில் இரு நாடுகளுக் கிடையே இத்தகைய நிலை இருப்பதற்கான அறிகுறி எது வும் காணப்படவில்லை. ஐக்கிய நாடுகள் சபையின் தொழில் நுணுக்க உதவித் திட்டம் கூட இம்முறையில் அமைய வில்லை. முதலில் சொன்ன விதமாகத்தான் இதுவும் இருக்கிறது.

சர்வதேசப் புனரமைப்புப் படையொன்றைத் திரட்ட வேண்டிய அவசியம் பற்றி மக்களுடைய ஸ்தாபனங்களும் சில தனி நபர்களும் இப்போது சிந்திக்கத் தொடங்கி யுள்ளனர். உலகெங்கிலுமிருந்து ஆண்களும் பெண்களும்

அப்படையில் சேரலாம். ஒரு சிலர் ஏற்கனவே இதைச் செய்யத் தொடங்கி விட்டனர். எதிர்காலத்தில் நடக்கப் போவதற்கு ஒரு உதாரணமாக இது இருக்கலாம். சர்வ தேச சோஷலிஸ்ட் வாலிபர் சங்கத்தைப் போன்ற அதிகாரபூர்வமற்ற சில ஸ்தாபனங்கள் ஏற்கனவே இத்துறையில் தனது கவனத்தைச் செலுத்தி வருகிறது.

ஐக்கிய நாடுகள் சபையோ அல்லது அதைத் தொடர்ந்து ஏற்படும் ஸ்தாபனமோ ஒருநாள் இத்தகைய சர்வதேசப்படை ஒன்றைத் திரட்டுவதெனத் தீர்மானிக்கலாம்.

ஆசியா செயலற்றுக் கிடக்கலாம். ஆயினும் சீர்குலைவை நோக்கிச் சென்று கொண்டிருக்கும் ஐரோப்பாவுக்கு அதனிடமிருந்து கற்றுக் கொள்ளவேண்டிய பல விஷயங்கள் உள்ளன. பல்வேறு கலாசாரத்தை சேர்ந்த மக்களை, அன்பினால் பிணைத்து அவர்களை ஓரிடத்தில் வேலை செய்யச் செய்தால் ஐரோப்பாவும் அமெரிக்காவும் தங்கள் சண்டைகளைக் கைவிட்டு விடும்; ஆசியாவும் ஆப்பிரிக்காவும் செயல் படத் தொடங்கிவிடும். பல்வேறு கலாசாரங்களைச் சேர்ந்த பலவிதமான குணங்களையும், தன்மையையும் வாய்ந்தவர்களை, யுத்த அடிப்படையில் இல்லாமல் அன்பின் அடிப்படையில் ஓரணியில் திரட்டுவதற்கு தனி நபர்களிடம் மனமாற்றமும், எண்ணத்தில் தூய்மையும் ஏற்பட வேண்டியதவசியம்.

இன்று நிலவும் சர்வதேச உறவுகளைப் பார்க்கும் போது மனித குல ஒற்றுமை அவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்ததாகப் புலப்படவில்லை. உலகில் ஒரு புறத்தில் அமெரிக்காவும் ரஷ்யாவும் உள்ளன. அமெரிக்கா ஆண்டுக்கு 110 மிலியன் டன் எஃகும், ரஷ்யா 35 மிலியன் டன் எஃகும் உற்பத்தி செய்கிறது. அமெரிக்காவில் ஒவ்வொருவருக்கும் வருடத்தில் சராசரியாக 200 முட்டைகளும் 200 லீடர் பாலும் கிடைக்கிறது. இந்தியாவின் நிலையைப் பார்ப்போம்.

இந்தியாவின் எஃகு உற்பத்தி 12 லட்சம் டன். ஒவ்வொருவருக்கும் வருடத்தில் சராசரியாக மூன்று முட்டை

களும், மூன்று லீடர் பாலுமே கிடைக்கிறது. உலகிலுள்ள வெள்ளையரல்லாத நாடுகளின் நிலையைப் பிரதிபலிப்பது இந்தியா. ஐக்கிய நாடுகள் சாசனத்திலும் இந்த உண்மை காணப்படுகிறது. அது உலகை வல்லரசுகள் என்றும், சிறு நாடுகள் என்றும் பிரித்திருக்கிறது. அதாவது நான்கு பிராமண நாடுகள்; சுமார் 56 பறையா நாடுகள். சர்வ தேச ஜாதிமுறை, சட்டத்திலேயே இடம் பெற்றிருக் கிறது. மனிதமனம் ஒரு விசித்திரமான கருவி. உள் நாட்டில் ஜாதி முறையை எதிர்த்து நீதிக்காகத் தனது சக்தியை யெல்லாம் செலவிடும்; சர்வதேச ஜாதியமைப் பில் நிலவும் அநீதியைக் கண்டும், காணாததுபோல் இருந்து விடும். இத்தகைய குருட்டுப் போக்குதான் சரித்திரச் சக்கரத்தைச் சுழற்றவும் அதனுடைய பயங்கர விளைவு களுக்கும் காரணமாக இருந்திருக்கிறது. உலகெங்கிலு முள்ள அரசியல்வாதிகள் பொதுவாக அவர்கள் தேசத்தை பொறுத்த வரை தீவிரவாதிகளாக இருக்கிறார்கள். ஆனால் சர்வ தேசத் துறையில் கெட்டவர்களாக இருக்கிறார்கள். சர்வதேசத் துறையில் நல்லவர்களாக இருப்பவர்கள் தேசியத் துறையில் சக்தியற்றவர்களாகக் காணப்படு கிறார்கள்.

இன்றுள்ள அரசியல் எல்லாவற்றிலும் இந்த தன்மை காணப்படுகிறது. தேசிய அரசியலின் அடிப்படை சர்வதேச உறவு வளர்வதற்கு விரோதமாக இருக்கிறது. உலக மக்களுக்கு உணவும் சமாதானமும் கிடைப்பதைக் குலைக்கும் விதத்தில் தேசமக்களுக்கு உணவும் சுதந்திர மும் அளிக்கும் முறை வகுக்கப்பட்டிருக்கிறது. நவீன நாகரிகம் இந்தத் தீமைகளை யெல்லாம் களைந்தெறிந்து மனிதகுல சமநிலை ஏற்பட முயலுமா என்பதை அத னுடைய இயக்க சக்தியையும் லட்சியத்தையும் ஆராய்ந்த பின்னரே கூற முடியும்.

# நவீன நாகரிகம்

அமெரிக்கத் தத்துவ அறிஞர் ஸ்காட் புசானன் என்பவரை நான் ஒரு சமயம், நாகரிகத்தினுடைய நோக்கம் என்னவென்று கேட்டேன். அச்சமயம் நான் பாரிஸில் இருந்தேன். கண்ணெதிரே பாரிஸ் நகரத்தின் அழகான கட்டிடங்கள் கம்பீரமாகத் தெரிந்தன. உடற் கட்டும் அழகும் வாய்ந்த பாரிஸ் நகரத்துப் பெண்களும், ஆண்களும் நடமாடிக்கொண்டிருந்தனர். பொதுவாக என்னுடைய தாய் நாட்டிலும், ஆசிய ஆப்பிரிக்க நாடு களிலும் நிலவும் மோசமான நிலைமையும் அச்சமயம் என் மனதில் எழுந்து வருந்தச் செய்தது.

நவீன நாகரிகத்தின் ரகசியம் என்ன? அதனுடைய விளங்காத மர்மம் எங்கே இருக்கிறது? இதையெல் லாம் உருவாக்கும் சக்தியை அமெரிக்காவுக்கும் ஐரோப் பாவுக்கும் கொடுத்தது எது?... இப்படி என் எண்ணம் ஓடியது. அப்போது நாங்கள் ஒரு உணவு விடுதியில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தோம். அங்கிருந்து மேரி மக்தலீனுடைய மாதாகோயிலைக் காண முடிந்தது. மக்தலீனுடைய கதை யாருக்குத்தான் தெரியாது. ஏசு கிறிஸ்துவின் அருள் கிட்டும்வரை விபசாரி யெனத் தூற்றப்பட்ட அவளை அதற்குப் பின்னர் ஞானியெனப் போற்றத் தொடங்கிவிட்டனர். மக்தலீனுடைய புனித நினைவாக எழுப்பப்பட்ட மாதாகோயில் அது. விபசாரி யும், ஞானியும் சமமானவர்கள் என்ற கருத்தையே வலி யுறுத்துகிறது அவளுடைய கதை. நான் கேட்ட கேள் விக்கு புசானன் அளித்த பதில், தம் கையினால் அம் மாதாகோயிலைச் சுட்டிக்காட்டியதுதான். வேறெதுவும் வாய்திறந்து சொல்லவில்லை. இரண்டாயிரம் ஆண்டு களுக்கு முன் வாழ்ந்த மக்தலீன் கதையைக் கூறியது அக்கோயில். ஆனால் அங்கே ஆயிரத்து எண்ணூறு வருடங்களுக்குப் பின்னர் பாரிஸ் நகரின் மிகச் சிறந்த

அழகியான மக்தலீன் "அறிவுத் தேவதை"யாக கோயில் கொண்டிருந்தாள்.

பிரெஞ்சுப் புரட்சி வாதிகள் நாஸ்திகர்கள். அவர்கள் கோயில், குருக்கள், கடவுள் ஆகிய எல்லாவற்றையும் கைவிட்டவர்கள். ஐரோப்பிய நாகரிகத்தின் ரகசியங்கள் இரண்டு ஆகும். ஒன்று மனித கௌரவத்தில் ஆத்மார்த்திக நம்பிக்கை; மற்றொன்று விஞ்ஞான சாஸ்திரத்தில் அறிவுக்குப் பொருத்தமான நம்பிக்கை. ஆனால் இந்த இரண்டும் ஒன்றை யொன்று பயன்படாமல் செய்துவிடும் அளவுக்குப் போய்விட்டன. நவீன கால ஐரோப்பியர்களுடைய எண்ணம் இந்த ரகசியத்தை நன்கு வெளிப்படுத்த முயன்றிருக்கிறது. எதிர்மறையான இந்த இரு தன்மைகளும் இதற்கு உதவி வந்திருக்கிறது. அதே நேரத்தில் இரண்டுக்கு மிடையேயுள்ள முரண்பாடும் பளிச்செனத் தெரிகிறது. இந்த இருவித எண்ணத்தைப் பற்றியும் அதன் விளைவாக எழும் நெருக்கடி, சக்தி பற்றியும் எவ்வளவோ கூறுவதற்கு இருக்கலாம்.

இதன் காரணமாக, உருவான சாதனைகள் ஏற்பட்டன. ஆரம்பத்தில் அந்த சக்தி வீண் விரயமாகிவிடவில்லை. இதற்குக் காரணம் ஐரோப்பிய நாடுகள் விஞ்ஞானத்தைப் பயன்படுத்தியதாகவும் இருக்கலாம். விஞ்ஞான ரீதியான முறை நல்லதா கெட்டதா என்பது அதைப் பயன்படுத்தும் விதத்திலேயே இருக்கிறது. முதலில் மேலே சொன்ன இரு தன்மைகளையும் கொண்டிருந்த ஐரோப்பிய நாகரிகம் நாளடைவில் அதைப் பின்பற்ற முடியாமல் போயிருக்கலாம்.

ஒரு நாகரிகத்தைப் பற்றிய இத்தகைய வியாக்யானம் திடீரென்று ஒளி பரப்புவதாக இருக்கலாம். ஆனால் அதைத் தொடர்ந்து இருள் சூழ்ந்துவிடுகிறது. எனவே இந்த வியாக்யானம் முற்றிலும் திருப்தியளிப்பதாக இருப்பதில்லை. கௌரவம், சமத்துவம், வாழ்க்கை வசதிகள் ஆகியவற்றை விழைவது எல்லா நாகரிகங்களுக்கும் பொதுவான அம்சமாகும். அதேபோலத்தான் வாழ்க்

கைக்கு அர்த்தம் தேடும் ஆவலும் பொதுவானது. குறிப்பிட்ட ஒரு நாகரிகத்தின் விசேஷத் தன்மையை, நன்கு ஆராய்வதின் மூலமே காண முடியும். இந்த விசேஷத் தன்மை, ஒரு நாகரிகத்திலிருந்து இன்னொன்றைப் பிரித்துக்காட்டும் தன்மை, எப்படி ஏற்படுகிறது? தற்கால நாகரிகத்தை எடுத்துக்கொள்வோம். இப்போது கைத்தொழில் விவசாயம் ஆகியவற்றுக்கு விஞ்ஞான அறிவு பயன்படுத்தப்படுகிறது. இதைக்கொண்டு இந்த நாகரிகத்தை மற்றதிலிருந்து வேறுபடுத்திக் காண முடிகிறதல்லவா? நவீன நாகரிகத்தில் தொழிற் கருவிகள் மாறிக்கொண்டே யிருக்கின்றன. உற்பத்தி சக்தியும் படிப்படியாக அதிகரித்துக்கொண்டு போகிறது. அமெரிக்கா, ரஷ்யா போன்ற நாடுகளில் இன்றுங்கூட தொழில் நுணுக்க முறை புரட்சிகரமாகவே இருந்து வருகிறது. இந்த அளவுக்குக் கருவியைப் பயன்படுத்தும் முறையை மனித வர்க்கத்தின் வேறு எந்த நாகரிகமும் அறிந்ததில்லை. அப்போது கருவிகள் மாறுதலடைவதில்லை. உதாரணமாக இந்திய விவசாயி உபயோகிக்கும் கலப்பையைச் சொல்லலாம். சென்ற இரண்டாயிரம் ஆண்டுகளாக அது மாருமல் ஒரே மாதிரியாகவே இருந்து வருகிறது. அதன் உருவத்திலோ, அமைப்பிலோ எவ்வித மாறுதலும் ஏற்படவில்லை. ஆனல் சென்ற மூன்று நூற்ருண்டு காலத்துக்குள் மேற்கு ஐரோப்பிய நாட்டினர் தங்கள் கருவிகளை மாற்றிக்கொண்டே வந்திருக்கின்றனர். உபயோகிக்கும் கருவிகளும் அதிகமாகிக் கொண்டே வந்துள்ளன. சென்ற இருநூறு ஆண்டுகளில் மனித வர்க்க சரித்திரம், அபிவிருத்தி செய்யப்படும் கருவிகள் நாளுக்கு நாள் பெருகிக் கொண்டு போவதையே கண்டு வந்திருக்கிறது. மேலும் மேலும் கருவிகளை அபிவிருத்தி செய்வதற்கு முடிவே இராதுபோலத் தோன்றுகிறது. இது புரட்சிகரமான தொழில் நுணுக்க முறைகளைக் கையாளும் நாகரிகம்—கைத் தொழிலுக்கும், விவசாயத்துக்கும் விஞ்ஞானத்தை குறிப்பிட்ட ஒரு முறையில் பயன்படுத்துவதின் விளைவாக எழும் நாகரிகம். இது பெருமளவு உற்பத்திக்கும், பிரம்மாண்டமான தொழிற்சாலைகள் வளருவதற்கும், மூலதனக் குவியல்

அதிகரிப்பதற்கும் வழி வகுத்து விட்டது. இந்த நாகரிகத்தில் வரவர உடலுழைப்பு குறைந்தும் யந்திர சாதனங்கள் பெருகியும் வந்திருக்கிறது.

விஞ்ஞானத்தினுல் இயங்கும் இத்தகைய நாகரிகம் நாட்டின் உற்பத்தி சக்தியைப் பெருக்கவும், மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தவும் விரும்புகிறது. இதில் வாழும் மனிதனுடைய உள்ளத்தில் பொதிந்து கிடக்கும் ஆர்வம், தான் கண்ணியமான வாழ்க்கை நடத்த வேண்டும்; தனக்கென மனை, மனைவி, மக்கள் வேண்டும் ஆகியவைதான். இவற்றை யடைவதே அவனுடைய வாழ்க்கையின் நோக்கமாக இருக்கிறது. இதற்கு முந்திய நாகரிகங்களில் வீடு, வாசல், மனைவி மக்கள் என்று சொன்னுல் அது சோர்ந்த மனதுக்கு இதமளிக்கும் இடமாக இருந்திருக்கும். ஆனுல் இன்றே அவை முக்கியமான அங்கம் வகிக்கின்றன.

தனது வாழ்க்கை வசதிகளை மென்மேலும் பெருக்கிக் கொள்ளவெண்டும் என்ற ஆர்வமே உழைக்க அவனுக்கு ஊக்கமளிக்கிறது. தனி நபர்களுடைய இந்த ஆர்வத்துடன், தேச உற்பத்தியைப் பெருக்கும் கூட்டு ஆர்வம் பின்னிப் பிணைந்திருக்கிறது. ஒன்றில்லாமல் மற்றொன்று எற்பட முடியாதல்லவா? தானும் தன் குடும்பமும் சுகமாக வாழ வேண்டும் என்ற எண்ணமே புரட்சிகரமான தொழில் நுணுக்க முறை உருவாக அடிப்படையாக அமைகிறது. இந்த ஆசையினுல் தூண்டப்பட்டுதான் அமெரிக்கர்களும், ரஷ்யர்களும் பாடுபடுகின்றனர் என்பதில் ஐயமில்லை. இந்த இரு நாடுகளிலும் சொத்துரிமை முறை வெவ்வேருக இருந்தபோதிலும் இருநாட்டு மக்களுடைய அபிலாஷைகள் ஒன்றே யாகும். நவீன நாகரிகத்தைப் பொறுத்தவரை முதலாளித்துவக் கொள்கையை ஆதரிக்கும் அமெரிக்கனும், கம்யூனிஸக் கொள்கையை ஆதரிக்கும் ரஷ்யனும் அவர்களுடைய நோக்கத்தைக் கொண்டு பார்த்தால் இரட்டைப் பிறவிகளாகவே காட்சியளிக்கின்றனர். இருதேச மக்களையும் ஒரே விதமான உணர்வுதான் இயக்குகிறது. முரண்பட்ட இரு கொள்கைகளைப் பின்பற்றுகிறவர்கள் ஒரே விதமான

முறையைக் கையாளுவதற்கு இதற்கு முந்திய எந்த நாகரிகத்திலும் சான்று காண முடியாது.

மேற்சொன்ன விதமான தேசப் பொருளாதாரம், தனி நபர் உணர்வு ஆகியவற்றுடன் இணைந்ததாக உலக சமாதானம் சமத்துவம் ஆகியவற்றில் இன்னதென்று தெளிவாகப் புரியாத அபிலாஷை ஏற்படுகிறது. இத்தகைய தெளிவற்ற ஆசைகள் சரித்திரத்தின் எல்லா கட்டத்திலும் மனிதனை ஊக்குவித்து வந்திருக்கின்றது. ஆயினும் நவீன நாகரிகத்தில்தான் அவை அறிவுக்குப் பொருத்தமான அடிப்படையில் அமைந்துள்ளன.

தொழிலபிவிருத்தி, வாழ்க்கைத்தர உயர்வு, உற்பத்தியைப் பெருக்குதல், ஆகியவற்றின் மூலம் பொற்காலம் உதயமாகும். அதன் விளைவாக உலக நாடுகளிடையே நட்புறவு வளரும்; யுத்தங்கள் மறைந்துவிடும் என்று முதலாளித்வம், கம்யூனிஸம் ஆகிய இரண்டு கொள்கைகளைக் கடைப்பிடிப்பவர்களும் நம்புகின்றனர். சென்ற இருநூறு ஆண்டுகளில் ஐரோப்பிய மக்களின்வாழ்க்கைத் தரம் உயர்ந்துகொண்டே வந்ததானது ஒரு நம்பிக்கையை அவர்களுக்கு ஊட்டியது. தேசிய அடிப்படையில், சமூக பொருளாதார சமத்துவம் ஏற்பட்டு வருகிறதென்றும், இது நாளடைவில் உலகம் பூராவிலும் ஏற்படுமென்றும் நம்பத் தொடங்கினர். உலக மார்க்கெட்டை நாடிச்செல்லும் நவின நாகரிகம் தொழில் நுணுக்க வளர்ச்சி மூலம் பிற்போக்குப் பொருளாரத் தீமைகளையகற்றி உலகம் பூராவுக்கும் நன்மை செய்ய முடியும் என்று கருதப்பட்டது. இத்தகைய நம்பிக்கைகளும், கருத்துக்களும்தான் நவீன நாகரிகத்தை இயக்கும் சக்திகள்,

ஆனால் இந்த நாகரிகம் இப்போது தன் முடிவை நெருங்கிவிட்டது. உலகம் முழுவதும் பரவக்கூடிய சக்தியை அது இழந்துவிட்டது. அத்தகைய சக்தி அதற்கு எப்போதுமே இருந்ததில்லையென்றுகூடச் சொல்லலாம். ஐரோப்பாவில் நிகழ்ந்த தொழிற்புரட்சியும் அதைத் தொடர்ந்து நிகழ்ந்த விளைவுகளும் விசித்திரமான சரித்திரச் சூழ்நிலையின் காரணமாக ஏற்பட்டவை. அப்படி

ஆசியாவிலும், ஆப்பிரிக்காவிலும் ஏற்படுமென எதிர் பார்க்க முடியாது. மிகக் குறைவான சாகுபடி நிலம்; அதிகப்படியான ஜனத்தொகை; மிகவும் குறைவான தொழில் கருவிகள்—இவைதான் ஆசியாவின் நிலைமை. எனவே பெருவாரியான உற்பத்திமுறை ஆசியாவில் சாத்தியமேயில்லை. இந்திய நாட்டில் சதுரமைலுக்கு முந்நூறு பேர் வசிக்கின்றனர். ஆனல் ரஷ்யாவிலோ இருபதுபேர் கூட இல்லை. அவ்வளவு பரந்த நிலப்பரப்பும், குறைந்த ஜனத்தொகையும் ரஷ்யாவில் உள்ளது. எனவே மக்களுடைய உணவுப் பிரச்னையை கம்யூனிஸ்டுகள் திறமையாகச் சமாளித்துவிட்டதாக கூறிப் பெருமையடைவதில் அர்த்தமே கிடையாது. அங்கு இருபது பேர்; இங்கோ முந்நூறு பேர். இந்த உண்மையை மறந்து பேசக் கூடாது.

சரித்திர சூழ்நிலைக்கு உகந்ததாக அரசியல், பொருளாதாரத் தத்துவங்கள் இருக்க வேண்டும். சரித்திர, பூகோள நிலைமைக்கு பொருந்தாத விதத்தில் உருவாக்கப் படும் சோஷலிஸம், கம்யூனிஸம் அல்லது வேறெந்தகொள்கையாக இருந்தாலும் அது தீமையையே விளைவிக்கும்—ஏகாதிபத்தியப் பிடிப்பின் மூலம் தற்கால ஐரோப்பிய நாகரிகம் தோற்றுவித்துள்ள தொழில் நுணுக்க முறை இனி பயன்படாது. அது ஏகாதிபத்திய முறை. இனிமேல் இதர கிரகங்களில் காலனிகள் கண்டுபிடிக்கப் பட்டாலன்றி வேறு நாடுகளில் இம்முறையைப் புகுத்தமுடியாது காலனி ஆதிக்கம்தான் இவ்வுலகில் தகர்ந்து கொண்டு வருகிறதே!

இதர நாடுகளின் விஷயம் ஒருபுறமிருக்க, நவீன நாகரிகம், தான், தோன்றிய நாட்டிலேயே தன் முடிவை அணுகிக்கொண்டிருக்கிறது. ஐரோப்பிய நாடுகள் மேற் கொண்டு தங்கள் நாட்டு மக்களின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்த முடியவில்லை. ஏற்கனவே உற்பத்தி ஏராளமாகி விட்டது. மேலும் மேலும் அதற்கு விற்பனை சந்தை கிடைத்தால்தானே இன்னும் உற்பத்தியைப் பெருக்கவும் அதன்மூலம் வாழ்க்கைத்தரத்தை உயர்த்தவும் முடியும். இதற்கு இப்போது வழியில்லாமல் போய்விட்டது. சென்ற

நாற்பது ஆண்டுகளாக பிரான்ஸ் நாடு ஸ்தம்பித்துக் கிடக்கிறது. சென்ற இருபதாண்டுகளாக இங்கிலாந்தில் மக்களின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்தும் அளவுக்கு உற்பத்தியை பெருக்க முடியவில்லை. நவீன நாகரிகத்துக்கு தாயகமான மேற்கு ஐரோப்பிய நாடுகள் இந்தப் போட்டியில் முன்னேற முடியாமல் பின்தங்கிவிட நேர்ந்துவிட்டது. இருநூறு வருடங்களுக்கு முன் ஐரோப்பிய நாடுகளுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது ஆசிய நாடுகள் எந்த நிலையில் இருந்தனவோ அந்த நிலைக்கு அமெரிக்காவுடன் ஒப்பிடும் போது ஐரோப்பிய நாடுகள் வந்துவிட்டன. அன்று ஆசியா, ஐரோப்பாவைப் பார்த்து ஏங்கியது; இன்று ஐரோப்பா, அமெரிக்காவைப் பார்த்து ஏங்குகிறது.

இனி வளர்ச்சிக்கு இடமில்லை என்ற நிலையை ஐரோப்பிய நாடுகள் அடைந்துவிட்டன. தொழில் நுணுக்க முறையை மேலும் புரட்சிகரமாகச் செய்ய வாய்ப்பு இல்லை; அதனால் தேச உற்பத்தி பெருகமுடியாமல் போய்விட்டது. ஆனால் இன்னும் வாழ்க்கைத்தரம் உயரவேண்டும் என்ற கூச்சல் மட்டும் குறையவில்லை. மேலும் உயர்த்தமுடியாதநிலை ஒருபுறம் இருக்க, இப்போதுள்ள வாழ்க்கைத்தரத்தைக் காப்பாற்றவே பெரும்பாடு பட வேண்டியிருக்கிறது.

நவீன நாகரிகத்தில் வெள்ளையர்கள் அடைந்துள்ள சமூக, பொருளாதார சமத்துவம் முந்திய நாகரிகங்களில் இருந்ததைவிட அதிகமான அளவாகும். ஆனால் இதுவும் கூட இப்போது மாறிக்கொண்டு வருகிறது. ஆரம்பம் தனி நபர்களுக்கு புகழ்தருவதாக இருந்தது; முடிவோ அவர்களை வெறும் எண்ணிக்கைகளாகக் கருதும் அளவுக்கு வந்துவிட்டது. ஆம். ஐரோப்பாவில் தனிமனிதனுடைய நிலை இதுதான். சிறைக் கைதிகளுக்கு எண்ணிக்கைத் தகடு கொடுக்கிறார்கள் அல்லவா? அதுபோல் நவீன நாகரிகத்தில் வாழ்க்கையில் எல்லாத் துறையிலும் மனிதனுக்கு மதிப்பு வெறும் எண்ணிக்கையோடு நிற்கிறது. புகழுடன் தொடங்கிய இந்த நாகரிகம் சக்கரம் போலச்சுற்றி மீண்டும், தான் தொடங்கிய இடத்துக்கே வந்துவிட்டது.

இப்போது மனிதக் கும்பலில் அவன் ஒரு எண். அவ்வளவு தான்!

இதற்குக் காரணம் என்ன? சமூக, பொருளாதார துறைகளில் சமத்துவ நிலையை அடையவேண்டுமென்ற ஆர்வத்தில், ஆத்மீக சமத்துவத்தை நவீன நாகரிகம் மனதில் கொள்ளத் தவறியதும் ஒரு காரணமாக இருக்கலாம். இப்போது, தானே தன், அழிவுக்குக் காரணமாக அது ஆகிவிட்டது. ஆத்மீக சமத்துவத்துக்கு முக்கியத்துவம் கொடுத்து அத்துறையில் உச்சநிலையை யடைந்த முந்திய நாகரிகங்கள், சமூக பொருளாதாரத் துறைகளில் சமத்துவத்தை எண்ணிப் பாராததால் அழிந்துபோயின. அதே விளைவே நவீன நாகரிகத்துக்கும் ஏற்பட்டுள்ளது. சமூகம், பொருளாதாரம், ஆத்மீகம் ஆகிய துறைகளில் சமத்துவம் ஒரே சீராக வளர்ந்தாலன்றி, ஒன்று இல்லாமல் மற்றொன்று ஏற்பட்டால் பலனில்லை. அதனால் அழிவு ஏற்படுவது நிச்சயம். புரட்சிகரமான தொழில் நுணுக்க முறை பெரிய அளவில் வளர்ந்ததின் காரணமாக மனித உள்ளமே மாறிவிட்டது. நவீன கால மனிதனுக்கு, சக மனிதர்களுடன் நெருங்கிய உறவு கொள்ளக்கூட அவன் மனம் இடங்கொடுப்பதில்லை.

நவீன நாகரிகத்தின் தொடக்கத்தின்போது அதனுடைய அபிலாஷைகள் எதுவாக இருந்ததோ தெரியாது. இன்று அது சிக்கல் நிறைந்ததாகிவிட்டது. எப்போதோ பலன் தரக்கூடிய உற்பத்தி, பிற்காலத்துக்கான கருவிகள், என்றோ ஒரு நாள் ஜனநாயகம், பின்னால் நியாயம் என ஒப்புக்கொள்ளக்கூடிய ஜனநாயகம், இப்படி எதையெடுத்துக்கொண்டாலும் என்றோ எப்போதோ பலனளிக்கக்கூடியதாகத்தான் இருக்கிறது. கட்டுப்பாடுகளும், தடைகளும் கூட உடனடியாகப் பலன் தரக்கூடியவைகளாக இல்லை. தொழிற்சாலை உற்பத்தியாக இருந்தாலும் சரி, வர்க்கப் போராட்டம் அல்லது ஜனநாயகம் ஆகிய எதுவாக இருந்தபோதிலும் நவீன நாகரிகத்தில் மேற்சொன்ன நிலையையே காண முடிகிறது. வர்க்கப் போராட்டத்தின் தன்மையையே மோசமாகத் திரித்துக் கூறத் தொடங்கிவிட்டார்கள். இதன் விளை

வாக பொய், உண்மையாகவும், கொலையே வாழ்வாக வும், ஜனநாயகப் படுகொலை பரிபூரண ஜனநாயகமாகவும் தேச சுதந்திரத்தைத் தியாகம் செய்வது உலக ஒற்றுமை யாகவும்—இப்படி எல்லாமே திரித்துக் கூறப்படுகிறது. உடனடியான பலனைப்பற்றி எண்ணிப்பாராமல் என்றோ வரப்போகும் பொற்காலத்தைப்பற்றியே நினைக்கிறார்கள். அந்த பொற்காலத்தை அடைய இப்போது உடனடியாக கவனிக்க வேண்டிய எல்லாவற்றையும் தியாகம் செய்யத் தயாராக இருக்கிறார்கள். நல்ல முடிவையடைய தீய வழிகளை மேற்கொள்கிறார்கள். இதற்காக நடைபெறும் காரியங்கள் ஒரு பயங்கர சூதாட்டம்போல் காட்சியளிக்கி றது. நல்ல லட்சியங்களை அடைய நேர்மையான வழிகளை மேற்கொண்டாலன்றி எதிர்காலக் கனவு நனவாக முடி யாது. நவீன நாகரிகம் இதை உணர்ந்து செயல்பட்டா லன்றி தான் எதிர்நோக்கும் பொற்காலத்தைக் காணவே முடியாது.

பின்னால் நேரப்போகும் ஒன்றின்மீது கொண்ட அள வற்ற நம்பிக்கை காரணமாக நவீன உலகம், எண்ணம்— பொருள், தனிநபர்—சமூகம், உணவு—கலாசாரம் ஆகிய வற்றை தனித்தனியே பிரித்துவிட்டது. இன்று இவற் றுக்கிடையே காணப்படும் முரண்பாடுகளும் மோதல்க ளும் செயற்கையாக உண்டாக்கப்பட்டவைகளாகும். எண்ணம், பொருள் ஆகிய இரண்டையும் எடுத்துக் கொண்டால் இரண்டுக்கும் முரண்பாடு இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. ஆனால் இன்றுள்ள நிலை என்ன தெரியுமா? நான் எண்ண முதல் வாதியாக விரும் பும்போது, பொருள் முதல் வாதிகளின் மத்தியில் இருப் பது கஷ்டமளிப்பதாக இருக்கிறது. அதேபோல் நான் என் னைப் பொருள் முதல் வாதியாகக் கருதும்போது, எண்ண முதல் வாதிகள் மத்தியில் இருப்பது கஷ்டமாக இருக்கி றது. இப்படி இரண்டையும் பிளவுபடுத்தியது நவீன மனம் செய்த தவறாகும். நவீன மனம் பயங்கர பிசாசுக ளைப்போல சில கருத்துக்களை சிருஷ்டித்திருக்கிறது. தன் னால் உண்டாக்கப்பட்டதையே அதனால் அழிக்கமுடிய வில்லை. இதற்குக் காரணம் உடனடிப் பிரச்னைகளை

மறந்து எதிர்காலத்தைப்பற்றிய கற்பனை உலகில் சஞ்சரிப்பதேயாகும்.

இந்தியாவிலுள்ளவர்களுக்கு அசோகரையும் புத்தரையும் விட அதிகமான அளவுக்கு ராமனையும் சிவனையும் பற்றித் தெரியும். ராமனும், சிவனும் கற்பனையில் உருவானவர்கள் தான். ஆயினும் அவர்கள் மக்களுடைய மனதில் பெற்றிருக்கும் இடத்தைக் கவனிக்கும்போது ஆச்சரியப்படாமல் இருக்க முடியாது. மக்களிடையே இவர்களுக்கு இருக்கும் செல்வாக்குடன் ஒப்பிட்டால் சரித்திரப் பெரியார்களுடைய செல்வாக்கு ஒன்றுமேயில்லை எனக் கூறிவிடலாம். இதர நாடுகளிலும் புராணங்களும், கடவுளைப்பற்றிய கதைகளும் இருக்கத்தான் செய்கின்றன. சில சமயங்களில் சரித்திரப் பெரியார்கள்கூட மனிதனுடைய கற்பனை சக்தியால் கடவுள் தன்மை பெற்றவர்களாகி விடுகிறார்கள். அரேபியாவின் ஹுஸேன் அப்படிப்பட்ட ஒருவர். ஷியாக்கள் தங்கள் கடவுளைப் போற்றுவதை விட அதிகமாக அவரைப் போற்றுகின்றனர். ஒரு ஷியா முஸ்லிம், கடவுளை யாராவது தூற்றினால் கூட பொறுத்துக் கொள்வான்; ஆனால் ஹுஸேனைப் பற்றி இழிவாக எதுவும் சொல்லப்பட்டால் அவனால் சகிக்க முடியாது. உலகம் பூராவிலுமுள்ள மனித மனம் இப்படிப் பல புராண புருஷர்களையும் அவர்களைப்பற்றிய அதிசயக் கதைகளையும் ஏராளமாக சிருஷ்டித்திருக்கிறது.

சிவனைப் பற்றிக் கூறப்படும் கதைகள் என்னை மிகவும் கவர்ந்துள்ளன. அவருடைய செயல்கள் ஒவ்வொன்றுக்கும் அச்செயலிலேயே நியாயவாதமும் அடங்கியிருப்பது ஒருவேளை அதற்குக் காரணமாக இருக்கலாம். அல்லது பார்வதியுடன் அவருக்குள்ள உறவு பற்றி எண்ணிறந்த கதைகள் கூறப்படுவதும் காரணமாக இருக்கலாம்; அவைதான் எவ்வளவு சுவாரஸ்யமானவை? ஆணுக்கும் பெண்ணுக்குமிடையே இவர்களைவிட ஆழ்ந்த காதலைக் கொண்ட வேறெவருடைய கதையையும் நான் கேள்விப்பட்டதில்லை. இது கடவுள் சம்பந்தப்பட்டதாக இருப்பதால் ஒரு வேளை அப்படி யிருந்ததோ என்னவோ? இது எப்படியோ போகட்டும். புராணக் கதைகள் இவ்

வளவு தூரம் மனிதர்களுடைய மனதைக் கவர்ந்திருக்கக் காரணம் என்ன? சரித்திர நிகழ்ச்சிகளை அறிந்திருப்பதை விட அதிகமாக மக்களுடையமனதில் புராண புருஷர்களின் அதிசய சாகசங்கள் இடம் பெற்றிருப்பது ஏன்? என்றும் அழியாத சில விஷயங்களைப் பற்றி அவை சொல்கின்றன. அந்தக் கதைகளிலே காலப் போக்கில் பல மாறுதல்கள் ஏற்படலாம். ஒவ்வொரு நாட்டிலும் கூறப்படும் புராணக் கதைகள் மாறுபட்டிருக்கலாம். ஆயினும் இவற்றினுடைய உட்கருத்தும், சாராம்சமும் எப்போதும் ஒன்றாகவே இருந்து வருகின்றன. புராண புருஷர்களிடம் அன்பு, அனுதாபம், பக்தி ஆகியவற்றை ஏற்படுத்துவதில் இக்கதைகளில் ஐக்கியபாவம் காணப்படுகிறது.

அழிந்து விடக்கூடியதும், அழியாமல் நிலைபெற்றிருக்கக் கூடியதும் ஒவ்வொரு கணத்திலும், காலகட்டத்திலும் ஏற்படுகின்றன. இதை மனிதர்கள் தவறாகப் புரிந்து கொண்டு வந்துள்ளனர். என்றோ வரப்போகும் பொற்காலத்தைப்பற்றி கனவு கண்டு கொண்டிருக்கும் தத்துவாசிரியர்கள், இன்றுள்ளதை கவனிக்கத் தவறி விடுகின்றனர். இன்று நடைபெறும் சில நிகழ்ச்சிகள் நிலைத்து நிற்கக் கூடும் என்பதை அவர்கள் மறந்துவிடுகின்றனர். தனி நபர்களுடைய ஒழுக்கத்தைப் பற்றிப் போதிக்கும் நபர்களுடைய போக்கும் இதுவேதான். இரண்டுமே ஒன்றையொன்று சார்ந்திருப்பவை. அவை அழிந்துவிடக் கூடியதாக இருக்கும்போது சரித்திர நிகழ்ச்சிகளாகின்றன. அழியாமல் நிலைபெற்றிருக்கக் கூடியனவாக இருக்கும் போது புராண நிகழ்ச்சிகளாகவும், கலையையும் இலக்கியத்தையும், மதத்தையும் தத்துவங்களையும் வளப்படுவதாகவும் ஆகின்றன. இதை ஒதுக்கிவிட்டு உண்மையாக நடந்த சம்பவங்களை மட்டுமே ஆதாரமாகக் கொண்டு சரித்திரத்துக்கு வியாக்யானம் செய்வது ஒருதலைப்பட்சமானதாகவே இருக்கும். மொழி வளத்துக்கு உரைநடை, கவிதை இரண்டுமே அவசியம். அதுபோல் மனிதகுல வாழ்வுக்கு சரித்திரம் உரைநடையாகவும், புராணங்களும் கற்பனைக் கதைகளும் கவிதைகளாகவும் இருக்கின்றன. மனிதர்களுடைய வாழ்வைப் பற்றி சரித்திரத்திலிருந்து

தெரிந்துகொள்ள வேண்டியிருப்பது எவ்வளவோ இருக்கலாம். ஆனால் இத்துடன் நின்றுவிடாது சரித்திர சம்பவங்களுக்கு அப்பாற்பட்ட பலவற்றையும் தெரிந்து கொள்ளாமல் போனால் இது பலன் தராது. சரித்திர நிகழ்ச்சிகளிலிருந்து தெரிந்துகொள்வதுடன் இருந்துவிடாமல் என்றும் அழியாமல் நிலைத்திருக்கும் புராணக் கதைகளிலிருந்தும் நாம் மனிதகுல சரித்திரத்தைத் தெரிந்து கொள்ள முயல வேண்டும். அதுவே பூரணமான தெளிவை நமக்களிக்கும்.

இந்த இரு அம்சங்களையும் இணைத்து மனிதகுலம் செயல்பட்டால் 'பொற்காலம்' என்றோ இல்லை; இன்றே இப்போதே தோன்றமுடியும். எதிர்காலத்தில் தோன்றும் என அதை ஒத்திப் போடவேண்டியதில்லை. ஏராளமாகப் பணம் சேர்த்து எதிர்காலத்தில் பணக்காரனாக விளங்க வேண்டுமென்பதற்காக இன்று எல்லாவித சுகங்களையும் துறந்து கருமியாகத் திகழும் பேராசைக்காரனைத்தான் எதிர்காலத்தில் 'பொற்காலம்' ஏற்படும் என்று எண்ணிக் கொண்டிருப்பவர்களுடன் ஒப்பிட்டுக் கூறமுடியும்.

இன்றே இப்போதே பொற்காலம் தோன்றவேண்டும் என்ற உறுதியுடன் நாம் செயல்பட்டால்தான் அது ஏற்பட முடியும். மேலே சொன்ன இரு அம்சங்களையும் நாம் சேர்த்தே பார்க்கவேண்டும். ஒன்றை ஆத்மார்த்திகமானது என்று கூறி ஒதுக்கிவிட்டு மற்றொன்றை மட்டும் பற்றிக்கொண்டு முன்னேற எண்ணினால் அது முடியாத காரியம். மேலும் அது பல துன்பதுயரங்களும் துரதிர்ஷ்ட சம்பவங்களும் நேர வழிவகுத்து விடும். இவை இரண்டும் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்தவையாக இருக்க வேண்டும். இரண்டையும் இணைக்கும் சங்கிலியாக 'உடனடித் தத்துவம்' இருக்க வேண்டும். என்றோ எப்போதோ ஏற்படும் அல்லது ஏற்படுத்தலாம் என்று ஏங்கிக் கொண்டிராமல் இன்றே, இப்போதே ஏற்பட வேண்டும் என்று நாம் செயல்பட வேண்டும். வர்க்கப் போராட்டம், உற்பத்தி, உலக பார்லிமெண்ட், மனிதகுல சமநிலை ஆகிய எல்லாத் துறைகளிலும் இக்கொள்கை பின்பற்றப்பட வேண்டும். உடனடித் தத்துவக் கொள்கையைப் பின்பற்

றும்போது நாம் மேற்கொள்ளும் ஒவ்வொரு நடவடிக்கையும் நியாய பூர்வமானதாக இருக்கும். அடுத்துவரும் நன்மைக்கு இன்றிழைக்கும் தீங்கில் சமாதானம் காண முடியாது. புனிதமான நோக்கங்களும், புரட்சியும் இணைந்து செயல்படாவிட்டால் அது ஆத்மீக, லௌகிக துறைகளில் பெரும் நாசத்துக்கு அடிகோலிவிடும். நல்ல ஒன்றை யடைய நல்ல முறைகளைக் கையாள வேண்டுமே யன்றி தீய வழிகளைப் பின்பற்றக் கூடாது.

எதிர்காலத்தில் பொற்காலம் தோன்றும் என எண்ணுகிறவர்கள் ஒரு தவறைச் செய்து வருகிறார்கள். உயர்ந்த லட்சியத்துக்காக தவறானவழிகளைக் கையாண்டாலும் பரவாயில்லை; பின்னால் நன்மை ஏற்பட்டால் இன்றிழைக்கும் தீமைகளுக்கு சமாதானம் கூறிவிடலாம் என்பது அவர்கள் கருத்து. இவ்வழியைப் பின்பற்றினால் பொற்காலம் வரவே வராது. இன்றே இப்போதே ஏற்பட வேண்டும் என்ற கொள்கையை நமது ஒவ்வொரு நடவடிக்கையிலும் பின்பற்றினால்தான்—உற்பத்தி, வர்க்கப் போராட்டம், வர்க்கமற்ற சமுதாயத்தை நிறுவுவது ஆகிய எல்லாத் துறைகளிலும்—பொற்காலம் தோன்ற முடியும். உடனடியாகப் பொற்காலம் ஏற்பட வேண்டும் என்ற உறுதியுடன் நாம் செயல்பட்டால் அடுத்த தலைமுறையிலாவது போரும், வறுமையும், பயமும் இல்லாத சமுதாயத்தைக் காணமுடியும்.

# புதிய சமுதாயம்

ஒவ்வொரு நாகரிகமும் குறிப்பிட்ட ஏதாவது ஒரு துறையில் உயர்ந்தபட்ச முன்னேற்றத்தை எட்டிப்பிடிக்க முயன்றிருக்கிறதேயன்றி எல்லாத் துறையிலும் முழு வளர்ச்சி பெறவில்லை. எந்த நாகரிகத்தை எடுத்துக் கொண்டு பார்த்தாலும் இதையேதான் காண முடிகிறது. எல்லாத் துறையிலும் முழு வளர்ச்சி பெற்ற நாகரிகமாக இருந்தால் அது மனித குலம் முழுவதற்கும் பொருந்துவதாக இருக்கும். இதற்கு முந்திய நாகரிகங்களெல்லாம் முழு வளர்ச்சி பெறத் தவறி விட்டன. ஏதாவது ஒரு நாட்டில் நிலவும் நாகரிகத்தை எடுத்துக் கொண்டு பார்த்தால் அது, அந்த நாட்டு மக்களை மட்டும் வளப்படுத்தி, அதே நேரத்தில் உலகின் இதர பகுதி மக்களை ஒடுக்க முயலுவதாகவே இருக்கிறது; இருந்து வந்திருக்கிறது. தங்கள் நாட்டு மக்களைப் பற்றி மட்டுமே அவர்கள் கவலைப்படுகிறார்கள்.

இதன் விளைவாக ஏற்பட்ட நிலைமையை நாம் கவனிக்க வேண்டும். முன்னேற்ற மடைந்துள்ள ஒரு நாட்டின் மக்களுக்கும், பிற்போக்கிலிருந்த இதர நாட்டு மக்களுக்கு மிடையே இரு ஒரு பெரும் பிளவை ஏற்படுத்தியது. ஒரு சில நாடுகளில் அதிகாரபலம் குவிந்தது. இதர நாடுகள் அவற்றுக்கு அடங்கிக்கிடக்க வேண்டி நேர்ந்தது. உலகின் எல்லாப் பகுதி மக்களும் சமமான வளர்ச்சி பெற்று வளமாக வாழும் நிலையை அதனால் ஏற்படுத்த முடியவில்லை. ஒவ்வொரு சமுதாயத்தையும் சேர்ந்த தனி நபர்களுடைய வளர்ச்சி நிலையும் இதுவேதான். அவர்களும் கூட முழு வளர்ச்சி பெற முடியாமற் போயிற்று. தனி நபர்களிடையே ஏதாவது சில அம்சங்கள் வளர்ச்சியுற்றுக் காணப்பட்டதேயன்றி எல்லா அம்சங்களும் முழுத் திறமை பெற்றுத் திகழ்ந்ததென்பது என்றுமே இல்லை. முழுவளர்ச்சி பெற்ற ஒரு நாகரிகத்தைத் தோற்றுவிக்க

நாம் விரும்பினால் இந்த விஷயத்தை மனதில் கொள்ள வேண்டும்.

இன்று நிலவும் நாகரிகத்தைக் கவனிப்போம். இதனுடைய பிரதான அம்சம் மூலதனக் குவியல்தான். இதன்படி மனித குலம் முழுவதற்கும் வளமான வாழ்வு ஏற்படவேண்டுமென்று சொன்னால், அதற்கு எவ்வளவு மூலதனம் தேவைப்படும் என்பதைக் கணக்கிட்டுப் பார்த்தால், அது நினைத்தும் பார்க்க முடியாத அளவு பெருந் தொகையாக இருக்கும். இது சாத்தியமேயல்ல. இன்று அமெரிக்காவிலுள்ளதைப்போல் உலக நாடுகளிலுள்ள மக்கள் எல்லோருடைய வாழ்க்கையையும் வளப்படுத்துவதாக வைத்துக்கொள்வோம். அதற்கு உத்தேசமாக 15,000,00, கோடி ரூபாய்கள் தேவைப்படும். மேற்கு ஐரோப்பிய நாடுகளிலுள்ள மக்களின் வாழ்க்கைத்தர அளவுக்கு உலக மக்கள் அனைவருடைய வாழ்க்கையையும் உயர்த்துவதாக இருந்தால் அதற்கு இவ்வளவு தொகை தேவைப்படாவிட்டாலும், இதில் பாதியாவது தேவைப் படும் என்பது நிச்சயம்.

சமுதாயத்தின் அடித்தளத்திலே உழன்று கொண்டிருக்கும் மக்கள் இந்த அளவு மூலதனத்துக்கு எங்கே போகமுடியும்? இது நடக்கக்கூடியதா? உயர்ந்த நிலையில் இருக்கும் நாட்டு மக்களும் மற்றவர்களுக்கு இத்தொகையைக் கொடுத்து உதவ முன் வரமாட்டார்கள். இவ்வளவு மூலதனம் தேவைப்படுவதற்கு இன்றுள்ள தொழில் நுணுக்க முறைதான் காரணம். அதனாலேயே இம் முறை உலகம் முழுவதும் பயன்படத் தகுதியற்றதாக இருக்கிறது. உயர்ந்த நிலையில் உள்ள மக்கள், தாழ்ந்த நிலையில் உள்ளவர்களுடைய வாழ்க்கையை உயர்த்த தங்கள் சுக போகங்களை தியாகம் செய்ய முன் வந்தாலும் கூட இரு பகுதி மக்களுடைய வாழ்க்கைத் தரமும், சமநிலை அடைய வெகு காலம் பிடிக்கும். சரித்திரத்தில் இது நிகழும் என்று எதிர்பார்க்க முடியாது.

தங்களுடைய, சலுகைபெற்ற விசேஷ நிலையைப் பாதுகாத்துக் கொள்வதற்காக அவர்கள் அணு, ஜலவாயு குண்டுகளை தயாரிக்க தயாராக இருக்கிறார்களேயன்றி,

அடித்தளத்திலுள்ள மற்றவர்களுக்காக தங்கள் சலுகைகளை விட்டுக் கொடுக்கத் தயாராக இல்லை. பின்னதைவிட முன்னது அவர்களுக்கு சுலபமாகப் படுகிறது. பயங்கரமான இந்த விஷக் குண்டுகள் பெருகுவதற்கு காரணத்தை சரித்திரப் பின்னணியில் ஆராய்ந்தால் இந்த விடையே நமக்குக் கிடைக்கிறது. அணு, ஜலவாயு குண்டுகள் நவீன நாகரிகத்தின் பாவக் கரங்கள். இதை உற்பத்தி செய்து வைத்திருக்கும் நாடுகள் பழங்கால பிரமாண்டமான மிருகமான 'டினோஸர்' போன்று வளர்ச்சி பெற்றவை. டினோஸர் எப்படி அளவுக்கு மீறிய வளர்ச்சியினால் அழிந்து போயிற்றோ அதே போல் இந்த நாடுகளும் அழிந்துவிடும். இவர்கள் பாலூற்றி வளர்க்கும் இந்த ராட்சதப் பாம்புகள் இவர்களுடைய முடிவுக்கே காரணமாகி விடும். அணுகுண்டுகளை தயார் செய்ய ஆகும் செலவும், அதன் பயங்கர விளைவுகளினால் எழும் பயமும், அதற்கேற்ப மாறும் மனநிலையும், யுத்தங்களில் அவற்றைப் பயன் படுத்துவதும் இன்றைய நாகரிகத்தின் அழிவுக்கே வழிவகுக்கப் போகிறது.

ஆயுதத்துறையில் ஏற்பட்டுள்ள இந்த பயங்கர அபிவிருத்திக்குப் பதிலாக இதே துறையில் நல்ல முறையில் வளர்ச்சி பெற்றுள்ள நாகரிகம் வேறெங்கேனும் நிலவுகிறதா என்ற கேள்வி இங்கே எழுப்பப்படலாம். அப்படி எதுவுமே இன்று இல்லை. அகிம்சையை சரியான ஆயுதமெனக் கூறுவோரும் கூட அதிகார பலத்தைப் பரவல் முறையில் செய்யாமல் தங்கள் பலத்தைப் பெருக்கிக் கொண்டு போவதிலேயே முழுகவனமும் செலுத்துகின்றனர். எனவே இன்றைய நாகரிகத்துக்கு, பதிலாக விளங்கி அதன் தீமைகளைப் போக்கி விடக்கூடிய நாகரிகம் எங்குமே இல்லையெனச் சொல்லலாம். இப்போதுள்ளதை —குறிப்பிட்ட ஒரு துறையில் மட்டும் வளர்ச்சி பெற்றுள்ள நாகரிகத்தை—எல்லாத் துறையிலும் முழு வளர்ச்சி பெற்றதாக செய்ய முடியுமா என்பது தான் பிரச்னை. இன்றைய நாகரிகம் தன்னை மாற்றிக்கொள்ளாவிட்டால் அழிந்துபோவது நிச்சயம்.

ஐரோப்பிய நாடுகளும் இதே தவறைத்தான் செய்துள்ளன. வெளிநாட்டு வர்த்தகத்தின் அளவைக்கொண்டு ஒரு நாட்டின் முன்னேற்றம் முன்காலத்தில் தீர்மானிக்கப்பட்டது. இப்போது யந்திரசாதன வளர்ச்சி, தொழிற்சாலைகள் பெருகுதல் ஆகியவற்றைக் கொண்டு தீர்மானிக்கப்படுகிறது. ஐரோப்பிய நாடுகளும் முழுவளர்ச்சிபெற முற்படாமல் குறிப்பிட்ட ஒரு துறையில்தான் வளர்ச்சி பெற்றன. ஒரு அளவுக்கு மேல் வளரமுடியாத நிலையை அடைந்து இன்று தேக்கம் ஏற்பட்டுவிட்டது. அதன் பின்னரே இதரநாடுகளைப் பற்றி சிந்திக்கவும், அதற்கான தத்துவங்கள் பிறக்கவும் தொடங்கியது.

இப்போது ஐரோப்பாவில், உலக மக்கள் எல்லோருக்கும் வேலை கிடைக்கச் செய்யவேண்டும் என்று பேசப்படுகிறது. தங்களுடைய நாட்டில் வேலையளிக்க கையாளப்படும் முறையைக் கொண்டே எல்லா மக்களுக்கும் அளிக்கமுடியும் என அவர்கள் எண்ணுகிறார்கள். நன்கு முன்னேற்றமடைந்த நாட்டில் நிலவும் தொழில்நுணுக்க முறையைப் பயன்படுத்தி ஒருமணி நேரத்தில் செய்யக்கூடிய வேலையையே, வளர்ச்சியடையாத நாடுகளில் பத்து பதினைந்து மணி நேரம் பாடுபட்டுழைத்தால் செய்யமுடியும். எல்லோருக்கும் வேலையளித்து விட்டால் மட்டும் போதாது. அதே நேரத்தில் எல்லா நாடுகளும் சம அளவுக்கு செல்வத்தை உற்பத்தி செய்வதாக இருக்கவேண்டும். இதை சாதிக்க வல்ல தத்துவத்தை சென்ற இருநூறு ஆண்டுகளாக முயன்றும் உருவாக்க முடியவில்லை. தனது நாட்டைப் பற்றி மட்டுமே சிந்திக்கும் போக்கை கைவிட்டால் இது சாத்தியமேயாகும்.

ஆனால் மனிதமனம் இதற்கு இடங்கொடுக்குமா? உலகமக்கள் எல்லோருடைய வாழ்க்கைத் தரத்தையும் ஒரே அளவுக்கு உயர்த்த வேண்டுமென்றால் அதற்கேற்ற புதிய தொழில் நுணுக்க முறையை உருவாக்க வேண்டும். வாயளவில் இக் கொள்கையை ஒப்புக்கொண்டால் போதாது. அதற்காக உறுதியுடன் பாடுபட்டு கனவை நனவாக்க முன்வரவேண்டும். இது ஏற்படக்கூடும் என்பதற்கான அறிகுறி எதுவும் புலனாகவில்லை. ஆனால் இது

அவசியம்தான் என்ற உணர்வுமட்டும் வளர்ந்து வருவது புலப்படுகிறது.

இன்றைய நாகரிகத்தின் மற்றொரு விளைவு தனி நபர்களுடைய மனதைப் பாதித்து அவர்கள் நல்ல வழியில் சிந்திக்க முடியாமல் செய்துவிட்டதாகும். கலாசாரப் பண்புகள் மறைந்து இயந்திரம் போல் இயங்கும் நிலையை மனிதன் அடைந்து விட்டான். உடலுழைப்பும், உடற் சுகமும் பெரிதாகிவிட்டது. உள்ளத்தைப் பற்றி கவனிப்பார்

நவீன நாகரிக மனிதன் மகிழ்ச்சியுடன் இல்லை. புதிய பாதையில் நடைபோடத் துணிவு கொண்டவனுகவும் இல்லை. உழைப்பு ஒன்றுதான் அவனுக்கு மிஞ்சியது. இதே நிலை தொடர்ந்து எவ்வளவு நாட்களுக்கு இருக்க முடியும்? சலிப்பு மிக்க இந்த வாழ்வே கடைசியில் அவனது முடிவுக்கும் காரணமாகி விடும். அவனிடம் சாந்தி குடிகொண்டிருக்கவில்லை. அதனுல் மகிழ்வுடன் இருக்க இன்னும் அவன் கற்றுக்கொள்ளவில்லை. புதிய வாழ்க்கை முறைகளைக் கண்டுபிடிக்க அவனுக்குத் தெரியாது. இன்றைய நாகரிகத்தின் கடைக்கால், மகிழ்வு ததும்பும் வாழ்வுக்கு விரோதமானது. இந்த அஸ்திவாரத்தின் மீது சந்தோஷமென்ற மாளிகையை எழுப்புவது எப்படி? புதிய கலாசாரம் உருவானுல்தான் இன்றைய மனிதனுடைய உள்ளம் நிறைவு பெறும். பழைய பாதையிலேயே சென்ருல் வழி பிறக்காது. இதில் மற்றொரு வருந்தத் தக்க விஷயம் என்னவென்ருல் புதிய பாதையைப் பற்றி எண்ணுவதை விட்டுவிட்டு பழைய வழியைப் பற்றியே மனிதன் சிந்தித்துக் கொண்டிருப்பதுதான்.

உலகம் இன்று இரு முகாம்களாகப் பிளவுபட்டிருக்கிறது. ஒருபுறம் அட்லாண்டிக் முகாம்; மறுபுறம் சோவியத் முகாம். இரு முகாம்களுமே முழு வளர்ச்சி பெருமல் குறிப்பிட்ட துறையில் வளர்ச்சி பெற்றவை. ஒன்று முதலாளித்துவம்; மற்றொன்று கம்யூனிஸம். இரண்டுக்கும் ஏதோ வித்தியாசமிருப்பதாகப் பேசப்படுவதில் அர்த்தமே கிடையாது. இந்த இரு தத்துவங்களுக்கு மிடையேயுள்ள மோதலின் விளைவில்தான் உலகத்தின் தலைவிதியே

இருக்கிறது என்ற எண்ணத்தை எப்படியோ ஏற்படுத்தி விட்டார்கள். ஆனால் இது சற்றும் உண்மையில்லை.

மனிதகுலம் பூராவுக்குமான, எல்லாத் துறையிலும் முழு வளர்ச்சி பற்றி மேற்சொன்ன இரு தத்துவங்களைப் பின்பற்றுவோரும் எண்ணிப் பார்க்கவில்லை. எல்லா நாட்டு மக்களும் சம அந்தஸ்து பெற்று வாழும் சமுதாயத்தைப் பற்றி வாய் கிழியப் பேசுவதுடன் மட்டுமே கம்யூனிஸ தத்துவம் நிற்கிறது. ஆனால் நடப்பது வேறு. சுரண்டலை ஒழித்தால் எல்லோருக்கும் சுகம் கிட்டும், என்கிறது கம்யூனிஸம். உற்பத்தித் துறையில் போட்டி மனப்பான்மையை வளர்ப்பதன் மூலமே எல்லோரும் வளம் பெற்று வாழமுடியும் என்று கூறுகிற முதலாளித்வ கருத்தை போன்றதுவே இதுவும். வாயளவில் கூறப்படும் இக் கருத்துகளை நடைமுறையில் செய்து காட்ட இரண்டுமே முன் வரவில்லை.

இப்படி நாகரிகங்கள் பிளவுபட்டு நிற்பது புதிதாக நேர்ந்ததல்ல. ஒரு நாகரிகம் முதிர்ந்து உச்ச கட்டத்தை யடைந்த பின்னர், அழியத் தொடங்கும். அந்த அழிவைத் தடுப்பதற்காக இத்தகைய பிளவைத் தானே, தோற்றுவிக்கும். இதற்கு எல்லா நாகரிகங்களிலும் உதாரணத்தைக் கூற முடியும். ரோம்—பைஸாண்டியம், கௌரவர்கள்—பாண்டவர்கள், மெம்பிஸ்—நினேவி ஆகியவர்கள் இந்தப் பிளவுக்கு சில உதாரணங்கள். இந்தப் பிளவு காரணமாக உலகமே பாதிக்கப்பட்டது—பயங்கர யுத்தங்கள் ஏற்பட்டன என்று புராணங்களை இயற்றிய புலவர்கள் கூறுவதிலே உண்மை யில்லாமல் போகவில்லை. அவர்களிடையே ஏற்பட்ட பிளவு உலகைப் பாதிக்கா விட்டாலும் அதன் விளைவாக எழுந்த யுத்தங்களால் உலகம் பாதகமடைந்திருக்கு மல்லவா? மகாபாரத காலத்திலிருந்தே ஒரு ரசமான கூற்று இருந்து வருகிறது. கௌரவர்களும், பாண்டவர்களும் ஒருவரோடொருவர் சண்டையிட்டுக்கொண்ட போதிலும் வெளியுலகுக்கு தாங்கள் 105 பேர் என்றே சொல்லிக்கொண்டார்களாம். சகோதரச் சண்டை இருந்தபோதிலும் கௌரவர்களும்

பாண்டவர்களும் தங்கள் காலத்திய நாகரிகத்துக்கு தங்கள் திறமைக்கேற்ற முறையில் சேவை செய்தனர். இன்று அட்லாண்டிக் முகாமும், சோவியத் முகாமும் இதேபோலத்தான் தங்கள் தங்கள் நாகரிகத்தின் தூண்டு தலுக்கேற்ப சேவை செய்ய முயலுகின்றன. தங்கள் தங்கள் நாட்டின் உற்பத்தியைப் பெருக்கவும் மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தவும் அவர்கள் இடை விடாது பாடுபடுகின்றனர். தேசிய எல்லைக்குள்ளேயே தான் இவர்களுடைய கருத்தெல்லாம். இருவருடைய நோக்கமும் ஒன்றேதான். வெளி உலகைப் பொறுத்த வரை இரு சாராராலும் நன்மை கிடையாது. ஆனால் இவர்களுக்கிடையே ஏற்படும் மோதல் வெளி உலகைப் பாதிக்கவே செய்கிறது. கௌரவர்களுக்கும் பாண்டவர் களுக்கு மிடையே இருந்த பிளவினால் உலகம் பாதக மடையாத போதிலும், அவர்களிடையே நடந்த யுத்தத் தினால் பாதிக்கப்பட்டதல்லவா? அதைப் போன்றதுதான் இதுவும்.

இந்த தத்துவங்களில் ஏதாவது ஒன்றுதான் உலகின் தலைவிதியைத் தீர்மானிக்க முடியும் என்று வெளியுலகம் எண்ணத் தொடங்கியிருப்பதுதான் வருந்தத்தக்கது. இத்தகைய எண்ணம் சரித்திரம் பூராவும் இருந்து வந் திருக்கிறது. அடிமைகள் தங்கள் எஜமானர்கள் பக்கம் நின்று அவர்களுக்காகப் போரில் ஈடுபடுவதைப்போலத் தான் இந்த இரு முகாம்களை சார்ந்து நின்று கொள்கை என்ற பெயரில் மற்றவர்கள் போராடுவதும். இப்படிச் செய்பவர்கள் இதன் மூலம் புதிய நாகரிகத்தை தோற்று விக்க முடியாது என்பதை உணரவேண்டும்.

போராட்டமின்றி புதிதாக எதுவும் பிறப்பதில்லை. இந்தப் போராட்டம் பலாத்காரத்தையும், ரத்தக்களறி யையும் அடிப்படையாக கொண்டிருக்க வேண்டியதில்லை. கடந்த காலத்தில் அப்படித்தான் இருந்திருக்கிறது. அதற்கு காரணம் நாடுகளிடையே அதிகார பலம் சமநிலை யில் இல்லாமல் இருந்ததுதான். ஆனால் மனித குலத்தில் சமநிலையை ஏற்படுத்த நாம் விரும்பும்போது அதற்கான போராட்டம் பலாத்காரமற்றதாகவே இருக்கவேண்டும்.

உள்நாட்டில் இது சாத்தியமாக ஓரளவு இருக்கிறது. ஆனால் சர்வதேச உறவில் இது காணப்படவில்லை. இதற்கான முறையை கண்டறிவது மிக அவசியம். அந்த முறை தான் சட்டமறுப்பு இயக்கம். எல்லோருடைய மனதிலும் இந்த எண்ணம் நிலைபெற வேண்டும். நிரந்தரமாக இது நிலைபெற்றால்தான் பலாத்காரப் போராட்டத்துக்கு அது சவாலாக விளங்க முடியும். இன்றுள்ள நிலைமையில் சமுதாயம் மேம்பட உலகநாடுகள் எல்லாம் ஒத்த வளர்ச்சி பெற—புதிய நாகரிகத்தைத் தோற்றுவிக்க, மனிதனுக்கு ஏற்ற ஒரே ஆயுதம் அநீதிக்கு தலைவணங்க மறுப்பதேயாகும்.

தனது சுழற்சி என்றாவது நின்றுவிடுமா என்பதை சரித்திரச் சக்கரம் நமக்குத் தெரிவிக்கவில்லை. இன்று மனித குலத்தின் முன்னுள்ள பிரச்னை இதுதான். ஒரு துறையில் உயர்ந்தபட்ச முன்னேற்றம் அடைவதா—எல்லாத் துறையிலும் முழுவளர்ச்சி பெறப் பாடுபடுவதா என்பதே அது. சரித்திரச் சக்கரத்தின் சுழற்சிக்குத் தலைவணங்கி அதன் முடிவுக்குத் தன்னை உட்படுத்திக் கொள்வதா? அல்லது அந்த சுழற்சியின் போக்கை எதிர்த்து நின்று புதிய நாகரிகத்தை நோக்கிச் செல்வதா என்ற கேள்வி மனித குலத்தின் முன்னே நிற்கிறது.

புதிய நாகரிகப் பாதையில் சென்றால்தான் மனிதகுல சமநிலை ஏற்பட முடியும். வர்க்கமும் வருணமும், அதிகார பலமும் ஒழிந்து உலகநாடுகள் எல்லாவற்றிலும் சம அளவு உற்பத்தி ஏற்படும் அதற்கேற்ற முறையில் புதிய தொழில் நுணுக்கமுறை உருவாகும். இணைந்த உறவுடன் மனித குலம் முழுவதும்முன்னேறும். உற்பத்தி சாதனங்கள் சமூக உடமையாகும். நிலங்கள் புனர்வினியோகம் செய்யப்படும். இதர சொத்துரிமைகளும் இதே போல் பரவலாகும். அது நீதியை அடிப்படையாகக் கொண்டிருக்கும். வருமானத்தில்உயர்ந்தபட்ச, குறைந்தபட்ச அளவு எல்லா நாடுகளிலும் அமுல் நடத்தப்பட்டு மனிதகுல ஒருமை வளர வழிவகுக்கும். மனிதன் அநீதியை எதிர்த்துப் போராடக் கற்றுக்கொள்வான். மனித குலம் ஏற்றத் தாழ்வற்ற, புதுவிழிப்பு பெற்ற சமுதாயத்தை நோக்கி முன்னேறும்.

# முடிவுரை

1953-ம் வருஷம் நான் வெளிநாடுகளில் ஐந்து வார காலம் சுற்றுப்பிரயாணம் செய்தேன். ஒருநாள் விமான நிலையத்தைச் சேர்ந்த 'பஸ்'ஸில் பிரயாணம் செய்துகொண் டிருந்தேன். அவ் வண்டியில் என்னைத் தவிர மற்றவர்க ளெல்லாம் வெள்ளையர்கள். வண்டியிலிருந்த வெள்ளைக்கார ஆண்களும் பெண்களும் இந்தியாவிலுள்ள கொசுக்கள், மற்றும் மூட்டைப்பூச்சிகள் பற்றியும்; அவை இழைக்கும் தீமைகள் பற்றியும் பேசிக்கொண்டிருந்தனர். வெகுநேரம் நான் பல்லைக் கடித்துக்கொண்டு வாய்திறவாமல் இருந்தேன். ஓரளவுக்கு இப்போது நான் பொறுமையாக இருக்க கற்றுக்கொண்டிருந் தேன். என்னுடன் பேச்சுக் கொடுத்த ஒரு வெள்ளை மாதிடம் இந்தியாவிலுள்ள நாகங்களைப் பற்றியும், அது கடித்தால் விஷத்தைப் போக்க மருந்தே கிடையாது என்றும் கூறினேன். நான் மனங்கசந்து அப்படிப் பேசுவதாக பஸ்ஸில் இருந்த சிலர் எண்ணினர். எனக்கு மனக்கசப்பு எதுவும் கிடையாது. ஆயினும் சரித்திரச் சக்கரம் தனது சுழற்சியில் ஏற்படுத்தும் கசப்பான நிகழ்ச்சிகளினால் என் மனம் வருத்தப்படுவதுண்டு.

இன்று உலகிலேயே மிகவும் மோசமான ஏழைமையிலும், சுகாதாரமற்ற நிலையிலும் இந்தியா இருப்பது உண்மைதான். இதே நிலை இன்னும் நூறு ஆண்டுகளில் அமெரிக்காவிலும், ஐரோப்பாவிலும் ஏற்படலாம் என்று அப்போது சொன் னேன். அதுதான் சரித்திரச் சக்கரம். விருப்பு வெறுப்பின்றி அது சுழன்றுகொண்டிருக்கிறது. எனது நாடும், மக்களும் இதற்கு முன் இருமுறை சரித்திரத்தில் மகோன்னத நிலையில் இருந்திருக்கின்றனர். மீண்டும் மூன்றுவது முறை அப்படி ஏற்படுவதை நான் விரும்பமாட்டேன். ஏனெனில் அப்படி அவர்கள் மகோன்னத நிலையை யடைந்தால் உடனே வீழ்ச்சி யடைவது நிச்சயம். அமெரிக்கர்களும் ஐரோப்பியர்களும்,—கிரேக்கர்களும் ரோமானியர்களும் தவிர—இந்த சரித்திரச் சுழற்சிக்கு புதியவர்கள். ஏனெனில் அவர்கள் தனி இன மல்ல. இன்றைய வெள்ளையர் வர்க்கத்தில் அவர்கள் புதி தாகத் தோன்றியவர்கள். எனவே தங்கள் முன்னோர்க ளுடைய உயர்வு தாழ்வு பற்றி அவர்களுக்கு ஒன்றும் தெரி யாது. அதுதான் பெருந் துர்ப்பாக்கியம். சரித்திரச் சக்கரத் தின் சுழற்சியின் கீழ் அகப்பட்டு மனித குலம் உயர்வும் தாழ்வும் அடையாமல் மனித குலத்தில் சமநிலையைக் காணு வதன் மூலம் சரித்திரச் சக்கரத்தின் போக்கை மாற்றி யிருந் தால் உலகம் மகிழ்ச்சிக் கடலில் திளைத்திருக்கும்.

ஒரு சமயம் ஜிப்ரான் மெஜ்டலானி, அவருடைய தாய், வேலைக்காரன் ஆகிய மூன்று அரபு நாட்டாருடன் நான் பீரட் நகரிலிருந்து டமாஸ்கஸ் நகரத்துக்கு காரில் சென்றேன்.

கிறிஸ்தவ வெதமாகிய பைபிளில் இடம் பெற்றுள்ள கதைகள் நிகழ்ந்த பிரதேசங்களைத் தாண்டி நாங்கள் போய்க்கொண்டிருந்தோம். அப்போது காருக்குள் ஒரு விஷப்பூச்சி பறந்து வந்தது. ஜிப்ரானுடைய தாய் பயந்து போய் காரை நிறுத்தி விட்டாள். அப்பூச்சி என்மீது வந்து உட்கார்ந்தது. நான் ஒரு காகிதத்துண்டை எடுத்து அதனல் அப்பூச்சியை காருக்கு வெளியே எடுத்து விட்டுவிட முயன்றேன், ஆனால் அதுவோ வெளியேருமல் எனக்கு விளையாட்டுக் காட்டிக்கொண்டிருந்தது. ஜிப்ரானுடைய தாய் மேலும் பயந்து போய் அதைக் கொன்று விடுமாறு கூறினாள். அது தானகவே சில தினங்களில் இறந்துவிடுமென்றும் நாம் கொல்லவேண்டாம் என்றும் கூறினேன். இறக்குமுன் அது யாரையாவது கடித்துவிடுமென்று கூறி ஒரு நாகப்பாம்பைக் கண்டால் அதை உடனே அடித்துக் கொல்லமாட்டீர்களா என்று அவள் கேட்டாள். மிருகங்களும், பூச்சிகளும் அவைகளுக்கு தீங்கோ, பயமோ ஏற்பட்டாலன்றி மற்றவர்களைத் தாக்குவதில்லை என்றேன். அர்த்தமில்லாத பயம் அல்லது வெறுப்பின் காரணமாக மனித வர்க்கத்தை சேர்ந்த ஒருவர் உங்களைத் தாக்கினல் நீங்கள் என்ன செய்வீர்கள் என்று அவளைக் கேட்டேன். அவனைத் திருப்பித் தாக்கி கொன்றுவிட முயற்சிப்பேன் என்று அவள் பதிலளித்தாள். அப்படிச் செய்வதாக இருந்தால் தற்காப்புக்காக மனித குலம் பூராவையுமே கொல்லவேண்டியிருக்கும் என்றேன்.

ஜிப்ரான் இச்சமயம் தலையிட்டு தனது தாயிடம் இந்தியாவைப்பற்றியும் காந்தியைப்பற்றியும் கூறினர். இதற்குள் காருக்குள் புகுந்த பூச்சி தானகவே வெளியே பறந்து போய் விட்டது. விஷப்பூச்சிகளை அகற்றவேண்டியதுதான். அப்படிச் செய்யாவிடில் அவற்றினல் ஏற்படும் தீமை அதிகமாகவே செய்யும். ஆனல் பூச்சிகளைக் கொல்வதன் மூலம் அவை ஒரேயடியாக அழிந்துவிடுவதில்லை. மேலும் மேலும் பிறக்கவே செய்யும். அவை பிறக்கும் இடத்தை கண்டு பிடித்து பிறக்காமலே தடுத்துவிட முடியும். எந்த குண்டுகளும்—அணு குண்டுகூட மனித குலத்தை பூண்டற்றுப் போகச் செய்துவிட முடியாது. அழிய அழிய அது வளர்ந்துகொண்டுதான் இருக்கும். விஷப்பூச்சிகள் நம்மைக் கடித்துவிடாமல் ஒதுக்கித் தள்ளும் அதே நேரத்தில் அவை உற்பத்தியாகும் இடத்தை சுத்தப்படுத்திவிட்டால் தீய விளைவுகளை தடுக்க முடியும். இதுவே மனிதனுக்கும் பொருந்தும். தீய மனிதர்களை கொன்று விடுவது போதாது தீமை வளருவதற்கான இடத்தை சுத்தம் செய்து தீமையைக் களையவேண்டும். சரித்திர நிகழ்ச்சிகளைப் படித்த பின்னராவது—அதன் உயர்வு தாழ்வைத் தெரிந்து கொண்ட பின்னராவது மனித குலம் இந்த உண்மையை உணருமா?

— ஆங்கிலப் பதிப்பின் முன்னுரை